# ஆதியூர் அவதானி சரிதம்

(முதல் தமிழ் நாவல்)

வித்துவான் சேஷையங்கார் இயற்றியது




விஜயா பதிப்பகம்
20, ராஜவீதி,
கோயமுத்தூர் - 1
 394 614.

# ஆதியூர் அவதானி சரிதம்

(முதல் தமிழ் நாவல்)

எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டை
முன்னிட்டு வெளியிடப்பட்டது.

வித்துவான் சேஷையங்கார்
இயற்றியது




விஜயா பதிப்பகம்
20, ராஜ வீதி,
கோயமுத்தூர் - 641 001.
☎ 34 614.

'ஆதியூர் அவதானி சரிதம்'
(முதல் தமிழ் நாவல்)

முதற் பதிப்பு : 1875
இரண்டாம் பதிப்பு : டிசம்பர், 1994

வெளியீடு :
விஜயா பதிப்பகம்
20, ராஜவீதி,
கோயமுத்தூர் - 1
 34 614

பக்கம் : xxx + 112 = 142

விலை ரூ. 22-00

புத்தகத் தயாரிப்பு :
ஸ்ரீதுர்க்கை பிரிண்டிங் பிரஸ்
21, மதுரைவீரன் கோயில் தெரு,
தி. நகர், சென்னை - 600 017.
 434 68 49.

# முதல் தமிழ் நாவல்

தமிழில் அச்சு இயந்திர வசதி பரவலாகப் பயன்பட்ட சமயத்தில், கடந்த நூற்றாண்டின் மத்தியிலே, எழுத்தறிவு பெறாதவர்களின் அறிவு வளர்ச்சிக்காகக் கர்ணபரம்பரையாக வந்த தமிழ் வீரர்களின் கதைகள் பாடல்களாக அச்சில் வெளியிடப்பட்டன. விழாக்களிலும் சந்தைகளிலும் இத்தகைய கதைப்பாடல் புத்தகங்கள் விற்கப்பட்டன. எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் இந்தப் பாடல் கதைகளை ராகம் போட்டுப் படிக்க, படிப்பறியாத மக்கள் கூட்டமாயிருந்து கேட்டு ரசிப்பது வழக்கமாயிருந்தது. தேசிங்குராசன் கதை, அல்லி அரசாணி மாலை, கட்டபொம்மன் கதைப் பாடல், முதலிய வீர சாகசக் கதைகள்தான் ஒரு காலத்தில் பாமர மக்களின் அறிவுக்கும் பொழுது போக்குக்கும் உதவின. அம்மானை என்ற இந்த இலகுவான பாடல் வடிவத்தை, சென்னை புரசைவாக்கம் வித்துவான் சேஷையங்கார் என்ற பேராசிரியர், கடந்த நூற்றாண்டின் பிற்பகுதியில் [1875], "இந்துக்களுள் காணப்படும் குணா குணங்களையும் நடைகளையும் வர்ணித்து நாவல் என்ற பெயர் கொடுத்து "ஆதியூர் அவதானி சரிதம்" என்ற தலைப்புடன் எழுதி வெளியிட்டார்.

மாயூரம் வேதநாயகம் பிள்ளை உரை நடையில் எழுதிய பிரதாப முதலியார் சரித்திரம் என்ற நாவல்தான் தமிழில் வெளிவந்த முதல் நாவல் என்று மதிப்பிட்டு

வந்திருக்கிறோம். அது வெளிவந்தது 1879ஆம் ஆண்டு. அதற்கு நான்கு ஆண்டுகளுக்கு முன்பே, 1875இல் **ஆதியூர் அவதானி சரிதம்** வெளிவந்து விட்டது. இது அம்மானைப் பாடல் வடிவில் இருந்த போதிலும், ஆசிரியர் சேஷையங்கார் உறுதியளிப்பதுபோல், ''இதிலடங்கிய சங்கதிகள் பல இந்துக் குடும்பங்களில் இக்காலத்திலுள்ளவைகள் தாம். ஆதலால் இது பொய்ப் பெயர் பூண்டு மெய்ப் பொருள் காட்டும்'' நாவல் வடிவமாக ஏற்றுக் கொள்ளப் பட்டு, தமிழில் வெளிவந்த முதல் நாவல் என்ற தகுதியைப் பெறுகிறது.

நாவல் என்ற இலக்கிய வடிவம் உரைநடையில்தான் இருக்க வேண்டும் என்பது இதுவரை ஒப்புக் கொள்ளப் பட்ட கருத்து. ''நாவல் என்பது கற்பனையின் அடிப் படையில் சமகால வாழ்க்கையில் காணும் மக்களையும், அவர்களுடைய வளர்ச்சியையும் பற்றிய உரைநடை நெடுங்கதை'' என்று அதிகார பூர்வமான ஆங்கில மொழி அகராதிகள் விளக்குகின்றன. 1740இல் **சாமுயேல் ரிச்சட்சன்** என்ற ஆங்கில ஆசிரியர் **பமீலா** என்ற பெயரில் (உரை நடையில்) எழுதிய நாவலைத் தொடர்ந்து இதுகாறும் நாவல் என்ற வடிவம் உரைநடையில்தான் இருக்க வேண்டும் என்ற மரபு வளர்ந்தது. ஆயினும், இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேலாக நிலைபெற்றிருந்த இந்த மரபு, சென்ற 1986ஆம் ஆண்டு **விக்ரம் சேட்** என்ற இந்திய ஆசிரியர் ஒருவரால் மீறப்பட்டது. **The Golden Gate** என்ற பெயரில் இவர் எழுதி வெளியிட்ட ஆங்கில நாவல், கவிதை வடிவில், ஷேக்ஸ்பியர் போன்ற இலக்கிய ஜாம்ப வான்கள் பக்குவப்படுத்திய ஸான்னெட் (Sonnett)வடிவில் அமைந்தது. இந்தப் படைப்பின் உள்ளடக்கம் சமகால வாழ்வில் அமெரிக்காவில் காணப்படும் நிலையற்ற ஓர் இளைய சமுதாயத்தைப் பற்றியது. நாவலுக்குரிய கற்பனையும் அளவும், அந்தக் கவிதைப் படைப்பில் உள்ளதால், அது கவிதை வடிவில் இருந்தாலும், அதை

''நாவல்'' என்று இன்றைய இலக்கிய உலகம் வரவேற்றிருக்கிறது. இந்த நாவல் ஆங்கில உலகில் பல பரிசுகளைப் பெற்று, லட்சக் கணக்கான பிரதிகள் விற்பனையாகிப் பிரபலம் பெற்றிருக்கிறது. இந்திய நாட்டில் சாகித்திய அகாதெமியும் இந்தப் படைப்பை நாவல் என்றே மதித்துப் பரிசு கொடுத்தது. இந்த அடிப்படையில் பார்க்கும்போது, வித்துவான் தூ. வீ. சேஷையங்காரின் **ஆதியூர் அவதானி சரிதம்** தமிழில் தோன்றிய முதல் நாவல் என்று கொள்ளலாம்.

ஆகவே, நாவல் உரைநடையில்தான் இருக்க வேண்டும் என்ற மரபு மாறிச் செய்யுள் வடிவிலும் எழுதப் படலாம் என்பதை இலக்கிய உலகம் அங்கீகரித்துவிட்டது என்றே கொள்ளலாம். ஆனால் **விக்ரம் சேட்** ஆங்கில நாவல் தோன்றி இரு நூறாண்டுகளுக்குப் பிறகு நிகழ்த்திய சாதனையை வித்துவான் சேஷையங்கார் தமிழ் நாவல் உரைநடையில் கூடத் தோன்றுவதற்கு முன்பே நிகழ்த்தி விட்டார். தாம் எழுதுவது நாவல்தான் என்பதை அவர் மிகவும் உறுதியாக நூலின் தலைப்பில் குறிப்பிட்டதோடு, ஆங்கிலம், தமிழ் இரண்டு மொழிகளிலும் எழுதிய முகவுரைகளிலும் விளக்கியிருக்கிறார்.

சேஷையங்கார் எழுதி வைத்த ஆங்கில முன்னுரையில் சில ''திராவிட'' அறிஞர்கள் தமிழில் நாவல்கள் எழுதும் முயற்சியை மேற்கொண்டிருப்பதைப் பற்றியும் குறிப்பிடுகிறார். அந்த அறிஞர்கள் உரைநடையில் எழுதினார்கள் என்பதையும், தாம் ஜனரஞ்சகமான கவிதை வடிவில் எழுதியிருப்பதாகவும் சொல்கிறார். ஆகவே, தமிழ் நாவலின் தொடக்க காலத்தில் நாவல் படைக்கும் முயற்சியில் முன்னோடிகள் ஈடுபட்டிருந்ததை இவர் அறிந்திருந்தார் போலும். (1875இல் வெளிவந்த நாவலின் இரு முகவுரைகளும் அப்படியே இப்பதிப்பில் வெளியிடப் படுகின்றன.)

ஆதியூர் அவதானி நாவலைப் பற்றி பரவலாக அறியப்படவில்லை. தமிழ் நாவல் வரலாற்றை எழுதிய வர்கள் சிலர் இந்த நூலின் பெயரை மட்டும் குறிப்பிட்டு இதன் முழுவாசகம் கிடைக்கவில்லை என்று சொல்லியிருக் கிறார்கள். இதைப் பற்றிய ஒரு விமர்சனம் டாக்டர் ஜே. பார்த்தசாரதியால் புலமை (செப்டம்பர், 1976) இதழில் வெளியிடப்பட்டது. அவருடைய உறவினரான பேரா சிரியர் மு. ராகவய்யங்காரிடம் ஒரு பிரதி இருந்ததாகக் குறிப்பிட்டிருந்தார். வேறு எங்கும் நம் நாட்டில் இந்த பிரதி கிடைக்கவில்லை. நாங்கள் இருவரும் சேர்ந்து எழுதிய ''தமிழ் நாவல் நூறாண்டு வரலாறும் வளர்ச்சி யும்'' என்ற நூலிலும் இந்த நாவலின் விவரத்தைச் சொல்லத் தகவல் கிடைக்கவில்லை.. நாலாண்டுகளுக்கு முன்பு சிவபாதசுந்தரம் லண்டனுக்குச் சென்றபோது, அங்கே பிரிட்டிஷ் மியூசியம் நூலகத்தில் ஒரு பிரதியிருப் பதைக் கண்டு அதன் Xerox பிரதியொன்றைப் பெற்று வந்தார். கிரௌன் அளவில் அச்சிடப்பட்ட இந்தப் புத்தகம் மொத்தம் நூறு பக்கங்களைக் கொண்டிருக் கிறது. ஆசிரியர் சேஷையங்கார் பற்றி முழு விபரங்கள் கிடைக்கவில்லை. நூலின் கடைசிப் பக்கத்தில் கண்டிருந்த 'பிழை திருத்தம்' பகுதியில் 15 பிழைகளே குறிப்பிடப் பட்டிருந்தது என்பது, அன்றைய அச்சுக்கலை வளர்ச் சிக்குச் சான்றாகிறது.

கதை, பாண்டிச்சேரி அருகில், ஆதியூர் என்ற கிராமத் தில் தொடங்குகிறது. உத்தமன் என்ற ஒரு பிராமண குடும்பத் தலைவன் இறந்துவிட, மனைவி காந்தாரியும், மகன் வினையாளன் என்பவனும், அவனுடைய 'சகலை' வெட்டுணியின் வீட்டில் வாழ நேரிடுகிறது. நாளடைவில் வினையாளனின் உபநயனமும், வெட்டுணியின் தம்பி குண்டுணியின் மகள் வீரப்பிடாரியின் திருமணமும் நடக் கின்றன. குடும்பம் ஏழ்மையில் வாடுகிறது. வெட்டுணி, பேராளூர் என்ற கிராமத்தில் பணியாற்றுகிறான்.

அவனுடைய மகனுக்கு நல்ல படிப்பு வசதி இல்லாததால் மாடு மேய்க்கும் தொழிலில் ஈடுபடுகிறான். வினையாளன் படிப்பில் முன்னேறுவதைக் கண்ட குண்டுமணியும் அவனுடைய மருமகன் அழிகண்டனும் பொறாமை கொண்டு துன்புறுத்துகிறார்கள். வெட்டுணியின் மனைவி மானவதி இதற்குத் தூண்டுகோல். இறுதியில் காந்தாரி யும் வினையாளனும் வெளியேறுகிறார்கள்.

சென்னைக்குச் செல்லும் வழியில் சூனாம்பேட்டுக் கருகில் ஒரு காட்டில் வினையாளன் நோய்வாய்ப்படு கிறான். நல்ல உள்ளம் படைத்த ஒரு மூதாட்டி அவர் களுக்குப் புகலிடம் கொடுத்து உதவுகிறாள். அவர்களிரு வரும் சென்னை அடைந்தபோது, வேலையிழந்த வெட்டுணியும், அவனுடைய குடும்பத்தாரும் வந்து சேருகின்றனர். காந்தாரி, அவர்களை வரவேற்று ஆதரவு தருகிறாள். இடையில் கல்வியில் முன்னேறிவிட்ட வினையாளன் மீது அவர்கள் மீண்டும் பொறாமை அடைய, பல சச்சரவுகள் ஏற்படுகின்றன. வெட்டுணியின் துர்போதனையின் விளைவாக காந்தாரி தன் மகனைக் கடிந்து கொள்ள, வினையாளன் மனம் வெறுத்து வெளியேறி ஒரு வீட்டுத் திண்ணையில் சரணடைகிறான். அந்த வீட்டுக்காரரின் உதவியால் சில மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதோடு பச்சையப்பன் பள்ளி யில் கல்வி பயின்று பல பரீட்சைகளில் தேர்வடைகிறான. துரோணர் என்ற அவனுடைய ஆசிரியர் அவனை மருத்துவக் கல்லூரியில் சேர்க்கிறார். உடற்கூறு பற்றிய நுணுக்கங்களை முற்றிலும் அறிந்து கொள்ளும் திறமை கொண்ட வினையாளன் அதுமுதல் அவதானி என்று அழைக்கப்படுகிறான்.

மருத்துவக் கல்லூரியில் பிணங்களை அறுத்துச் சோதனை செய்யும் பணி ஒரு பிராமணன் செய்யக்கூடிய தல்ல என்று உறவினர்கள் புகார் செய்து இம்சை

செய்கிறார்கள். அவதானி எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் புரிந்து கொள்ளாத காந்தாரியும் வெறுப்புத் தெரிவிக்கிறாள். ஜாதியை விட்டு விலக்கி விடுவார்கள் என்ற அச்சம்! இந்த இக்கட்டைத் தீர்க்கும் வகையில் காந்தாரி அவதானியின் திருமணத்திற்கு ஏற்பாடு செய்கிறாள்.

திருமணம் முழுவதும் பல சிக்கல்களிடையே நிறை வேறுகிறது. மணமகளின் பெற்றோர் பேராசையுடன் அதிகத் தொகை கேட்கிறார்கள். இதன் விளைவாக அவதானி வெகுவாகக் கடன் படுகிறான். தன்னுடைய தாயாரின் சொல்லைத் தட்ட மனமில்லாமல் மணம் புரிந்து கொள்கிறான். அதற்குப் பிறகும், வெட்டுணியின் ஆட்கள் அவதானியைப் பற்றிப் பல வதந்திகளைக் கிளப்பி விடுகிறார்கள். நல்ல வேளையாக ஒரு நண்பனின் உதவியைக் கொண்டு அவதானி மீண்டும் பணம் சம்பாதிக்கத் தொடங்குகிறான்.

அவனுடைய முன்னேற்றத்தைக் கண்டு சகிக்காத அந்த உறவினர்கள் அவனுடைய நலனைக் கருதுவதாகப் பாசாங்கு செய்து மீண்டும் வந்து ஒட்டிக் கொள்ளுகிறார் கள். சச்சரவுகள் தொடர்கின்றன. கபடமற்ற காந்தாரி அவர்களை நம்பி அவதானியின் துன்பங்களுக்கு அறியாமல் இடங்கொடுக்கிறாள். அவதானியின் மாமியார் மகளுடன் சேர்ந்துகொண்டு அவனுக்குப் பல கஷ்டங்களை ஏற்படுத்துகிறாள். அவனுடைய மனைவி பலாமுருடு பல குழந்தைகளைப் பெற்றும் இரண்டு பையன்களும் ஒரு பெண்ணும்தான் நிலைக்கின்றனர். உறவினர்களின் கொடுமைகளைப் பற்றித் தன் தாயாருக்குப் புரிய வைக்க முடியாத நிலையில் அவதானி ஆதியூருக்குத் திரும்பு கிறான். தன்னுடைய மூத்த மகனுடன் அவன் பல இடங்களில் சுற்றி அலைகிறான். நிலைமையைச் சற்றும் புரிந்து கொள்ளாத காந்தாரி அவதானியின் மகனுக்கு

உபநயனம் ஏற்பாடு செய்கிறாள். ஆகவே, அவதானி சென்னைக்குத் திரும்பும் அவசியம் ஏற்படுகிறது.

சென்னையில் தேவதத்தை என்ற க்ஷத்திரிய குலக் கைம்பெண் ஒருத்தியை அவதானி சந்திக்கிறான். தன்னுடைய நிலைமையைப் பயன்படுத்திக் கொண்டு தனக்கு இன்னல் விளைவிக்க வருபவர்களிடமிருந்து தப்பிக்கத் தேவதத்தை அவதானியின் உதவியை நாடுகிறாள். இருவருக்குமிடையே நட்பு முற்றிக் காதலாக மாறுகிறது. தனக்கு ஏற்கெனவே ஒரு மனைவி இருக்கும் நிலையில் தான் மீண்டும் மணம் புரிந்து கொள்ளலாமா என்பதற்கு அவதானி மனுதர்ம சாஸ்திரத்தில் ஆதாரம் தேடுகிறான். இதற்கிடையே அவதானியின் காலில் முள் குத்தியதால் ஏற்பட்ட நோய்க்கு சிகிச்சை பெறும் பொருட்டு இருவரும் ஆதியூர் செல்கிறார்கள். அங்கு, கிராமத்தவர் அவர்களை ஒழுக்கம் தவறியவர்களாகக் குற்றம் சாட்டி இகழ்கிறார்கள். அவதானி தேவதத்தையைச் சென்னைக்கு அனுப்பி விட்டுத் தனது நோய் தீர்ந்த பிறகு அவளுடன் சேர்ந்து இருவரும் ஆங்கிலம், வடமொழி இலக்கியங்களைப் படித்த வண்ணம் இணைந்து வாழ்கிறார்கள்.

கொடுமையே உருவமான பழைய உறவினர்கள் மீண்டும் அவர்களைப் பழித்துப் பல வதந்திகளைப் பரப்புகிறார்கள். காந்தாரியும் அவர்களை நம்பி அவனை வெறுக்கிறாள். தேவதத்தையை வெளியேற்றுவதற்காகக் காந்தாரி அவதானியின் மகளுடைய திருமணத்தை நடத்த முற்படுகிறாள்.

ஆனால் திருமண வீட்டிலே ஒரே களேபரம். ஒருவருக்கொருவர் சண்டையில் எதுவும் நடக்கவில்லை. அச்சமயத்தில் திறமைசாலியான தேவதத்தையை வரவழைத்து அவதானி அவள் கையில் நிர்வாகப் பொறுப்பைக் கொடுக்கிறார். அங்கொருவரும் இங்கொருவருமாகப்

பிரிந்து கிடந்த தாயாதியர் ஆச்சரியப்படும்படி திருமண ஏற்பாடுகள் சிறப்பாக நடக்கின்றன. எல்லோரும் மகிழ்ச்சியோடு ஒன்று சேர்கிறார்கள். ஆயினும் ஊரிலே தேவதத்தையின் உறவு வைப்பாட்டி என்று கருதப்படு வதைத் தடுக்க அவதானி அவளை முறைப்படி திருமணம் செய்து கொள்ள விரும்பி அனுகூலர் என்ற தமது உற்ற நண்பரின் உதவியை நாடுகிறார். அவரும் ''கனமாம் விநாயகரைக் கண்டு கொணர்ந்திடுவேன், சாத்திரங்கற்ற சதுரரைத் தானழைப்பேன்''

என்றுரை தந்தவரும் ஈச்சுரப் பட்டரெனும்
நன்றாய் மறையுணர்ந்த நல்லவர் கையாலே
வேதியர் கையால் விவாகச் சடங்கிழைத்தே
ஆதியூராரும் அரிவை கழுத்தினிலே
மங்கலமாகு நல்ல மாங்கிலியம் தான்முடித்தார்
திங்களுரோகிணிபோல் சேர்ந்தவர் தாமிருந்தார்.

இந்தப் புரட்சிகரமான முடிவுதான் இக்கவிதை நாவலின் புதுமை. கலப்பு மணமும் விதவாவிவாகமும் ஒன்று சேர்ந்த புதுமையை, நாம் சற்றும் எதிர்பார்க்காத காலத்தில், 1875இல் ஆசிரியர் சேஷையங்கார் துணிந்து செயல்படுத்திய விந்தையைப் பார்க்கிறோம். இதில் அதிசய மென்ன வென்றால் முதலில் வாயில் வந்தபடி திட்டிய தாயாரே ஒப்புக் கொள்கிறார்.

சங்கதி யெங்கும் தழைத்துப் பரவியது
அங்குறு தாயும் அறிந்துள்ளே ஆயலுற்றாள்
பேதை மதியாலே பிள்ளைமேல் தண்டெடுத்தோம்
ஏதினிச் செய்வோம் இணங்கி நடக்கவேண்டும்.

.........

என்று சொல்லி நடந்ததை ஏற்றுக் கொண்டது மாத்திரமல்ல, கலப்பு மணமும் கைம்பெண் விவாகமும் இனிமேல் நிலைத்து நிற்க வேண்டிய கொள்கைதான் என்று முடிவு

கட்டியதுதான் நாவலுக்கு முத்தாய்ப்பாக அமைகிறது. தாயார் புதிய நிலைமையை ஏற்றுக்கொள்வது மாத்திர மல்ல, அதற்கு உதாரணத்தையும் எடுத்துக் கூறுவதுதான் புதிய திருப்பமாகப் படுகிறது. தாயார் சொல்கிறாள்:

நெல்வேலிச் சேஷையங்கார் நேயமுள்ள புத்திரிக்குச்
சொல்லு மறுமணந்தான் தோஷமில்லை யென்று
செய்தார்
கைம்பெண் விவாகமிந்தக் காலத்தி லுண்டாச்சு
அம்புவி யெங்கும் அதுவே தலையெடுக்கும்
காலத் தியற்கைதனைக் கட்ட முடியாது
கோலமகனுமந்தக் கொம்பனை யைத்தான் மணந்
தான்
சாதிவிட்ட சாதியென்று தள்ளவினி வாய்க்காது
புவனத் திதுவும் புதுமையாய் விட்டதிப்போ.

விதவை மறுமணத்தைப் பற்றி இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில்தான் பாரதியார், மாதவையா, வ. ரா. முதலியவர்கள் பேச முன்வந்தார்கள். ஜி. சுப்பிரமணிய ஐயர் தயங்கித் தயங்கி பம்பாயில் நடத்தினார். ஆனால் 1875இல் வித்துவான் சேஷையங்கார் ''கைம்பெண்விவாக மிந்தக் காலத்திலுண்டாச்சு'' என்றும், ''சாதிவிட்டசாதி யென்று தள்ளவினி வாய்க்காது'' என்றும் கட்டியங் கூறு வதோடு, அம்புவி யெங்கும் அதுவே தலையெடுக்கும் என்றும், காலத்தியற்கைதனைக் கட்ட முடியாது என்றும் அறுதியிட்டுக் கூறிய வார்த்தைகள்தான் இந்த நாவலின் பண்பு.

''நெல்வேலி சேஷையங்கார் நேயமுடன் புத்திரிக்குச் சொல்லு மறுமணந்தான் தோஷமில்லை யென்று செய் தார்'' என்று வரும் குறிப்பைக் கொண்டு டாக்டர் ஜே. பார்த்தசாரதி, சேஷையங்கார் என்ற பெயர் ஒற்றுமை அடிப்படையில், ''இந்நூலில் ஆசிரியர் தம் சொந்த வாழ்க்கையனுபவங்களையே, தாம் பட்ட பாடு

களனைத்தையுமே உயிரோவியங்களாக்கிச் சொல்லில் வடித்து விட்டார்'' என்று முடிவு கட்டுகிறார், (புலமை செப். 1976). ஆனால் இங்கே ''நெய்வேலி சேஷையங் கார்'' என்று குறிப்பிடப்படுபவர் உண்மை வாழ்க்கையில் 1873ம் ஆண்டு, (நாவல் வெளிவருவதற்கு இரண்டு ஆண்டு களுக்கு முன்பு) நாகர்கோவில் நீதி மன்றத்தில் 'பிளீடர்' என்ற வழக்கறிஞராகத் தொழில் பார்த்த திருநெல்வேலி சேஷையங்கார் என்ற செய்தி இப்போது கிடைத்திருக் கிறது. சிங்கப்பூர் பல்கலைக் கழகத்துப் பேராசிரியர் டாக்டர் ஆர். சுந்தரலிங்கம் எழுதிய Politics and National Awakening in South India என்ற ஆய்வு நூலில் கண்ட குறிப்பைக் கொண்டு, லண்டன் இந்தியா ஆபீஸ் நூலகத் திலேயுள்ள Micro film சுருளில் பதிவு செய்யப்பட்டிருந்த 1873க்கான Athenaeum and Daily News என்ற சென்னை நாளிதழ்களிலிருந்து பிரதி செய்யப்பட்ட விவரங்களை, சென்னை Indian Express Weekend இதழில் (6.10.90) காணலாம். டாக்டர் சுந்தரலிங்கத்தின் குறிப்பை அறிமுகப்படுத்தியவர் நண்பர் ராஜ்கௌதமன்.

Athenaeum and Daily News என்ற நாளிதழ் சென்னை யிலிருந்து 1845—1885 கால கட்டத்தில் வெளியிடப் பட்டது. 1873 மே மாதம் 19ம் தேதியிட்ட இந்த இதழில் மேலே குறிப்பிடப்பட்ட சேஷையங்கார் வெளியிட்ட வாக்குமூலத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்.

''நான் திருநெல்வேலியைச் சேர்ந்த வடகலை வைஷ் ணவப் பிராமணன். திருவிதாங்கூர் நீதி மன்றத்தில் ஒரு வழக்கறிஞராகப் பணி புரிகின்றேன். என்னுடைய ஒரே மகள் தன்னுடைய பதின்மூன்றாவது வயதில் கணவனை இழந்துவிட்டாள் என்ற செய்தி கேட்டு மிகவும் அதிர்ந்து போனேன். என்னுடைய அருமை மகள் ஒரு விதவையாக வாழ்ந்து அவமதிப்புக்கும், அவமானத்துக்கும் உள்ளாகி

வாழ்க்கை முழுவதும் துன்பத்தை அனுபவிக்கும் விதவை என்ற நிலையை அடைந்து விட்டது எனக்குத் தீராத கவலையாக நேர்ந்துவிட்டது.'' பின்னர், வங்காளத்தில் சில கைம்பெண் திருமணங்களை நடத்தியதோடு, அன்றைய பிரிட்டிஷ் சர்க்காரின் சட்டப்படி அத்தகைய திருமணங்களின் விளைவாகப் பிறந்த குழந்தைகளுக்குச் சட்டப்பூர்வமான அங்கீகாரம் அளிக்கப்பட்டதையும் அறிந்த சேஷையங்கார், தமது மகளுக்கும் மறுமணம் செய்விக்கத் தீர்மானித்தார். இதையொட்டி, தமது சமூகத்தில் ஏற்படக் கூடிய எதிர்ப்பைச் சந்திக்கும் வகையில் பல நண்பர்களைக் கலந்தாலோசித்தார். ஹிந்து சாஸ்திரங்களைக் கற்றுத் தேர்ந்த பலர் அவருக்கு ஆதரவு தர முன்வந்தார்கள். இறுதியில், திருவிதாங்கூர் சமஸ்தான திவானின் ஆசியுடன் அவருடைய மகளுக்குத் திருமணம் நடந்தேறியது.

ஆனால், திருமண நாளன்று, எதிரிகள் அவரைக் கொலை செய்ய முயன்றனர். சில பிராமணர்களும், மறவர்களும் அவருடைய வீட்டைத்தாக்கியதோடு, மணப் பந்தலுக்கும் தீவைத்துவிட்டார்கள். இந்தச் சம்பவத்தின் விளைவாகத் தொடரப்பட்ட வழக்கில் 'சிலருக்கு விடுதலையும், ஒருவருக்கு மட்டும் ஐம்பது ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டது. மேலும் பல இடையூறுகள் சேஷையங்காருக்கு ஏற்பட்டுக் கொண்டேயிருந்தன. அவர் குடியிருந்த வீட்டுக்காரரர் அவரை வெளியேற்றி விட்டார். அப்பொழுதும், சில நண்பர்கள் அவருக்கு ஆதரவாக இருந்ததைக் கண்டு பொறாமை கொண்ட எதிரிகள் சேஷையங்காரை ஜாதியை விட்டு விலக்கும் அரசாங்க ஆணை ஒன்றை வெளியிடுவதில் வெற்றி கண்டு விட்டார்கள். அந்த ஆணையில் சேஷையங்கார் தமது விதவை மகளுக்கு மறுமணம் செய்வித்ததால் ஜாதி ஆசாரத்தை மீறிவிட்டார் என்றும், அதற்காக ஜாதியை விட்டு விலக்கப்பட்டிருப்பதாகவும், இனி அவர்கோயில் குளங்களுக்குச்

செல்வதற்குத் தகுதியற்றவர் என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. இதன் விளைவாக, அவர் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்த பிராமணப் பணியாளன் விலகிக் கொண்டுவிட்டான். குடும்பப் புரோகிதர் அவரைப் புறக்கணித்தார். மற்றும் நாவிதர், சலவையாளர் போன்றவர்கள் அவருக்குப் பணியாற்ற மறுத்து விட்டார்கள். அரசு ஆணைக்கு அஞ்சி திருநெல்வேலியில் இருந்த அவருடைய உறவினர்கள் சிலரும் அவரைப்புறக்கணிக்கத் தொடங்கினார்கள். இந்த விவரங்களையும், இந்த நிலைக்குக் காரணமாயிருந்த சில பிராமணர்களையும் சேஷையங்கார் தமது வாக்குமூலத்தில் குறிப்பிட்டிருந்தார்.

சேஷையங்காருக்கு ஏற்பட்ட துன்பத்தைப் பற்றி அந்த ஆங்கில நாளேட்டின் பிரிட்டிஷ் ஆசிரியர், அரசாங்கத்தின் ஆணையைக் கண்டித்து மிகவும் கடுமையான தலையங்கங்கள் எழுதியிருந்தார். சேஷையங்காருக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டுமென்றும் இந்த விஷயத்தில் திருவாங்கூர் அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கையை கைவிடுமாறு சென்னை அரசாங்கம் இவ்விஷயத்தில் செயல்பட வேண்டுமென்றும் அந்த ஆசிரியர் வலியுறுத்தியிருந்தார். இதையொட்டி, சில விசாரணைகள் தொடங்கி சேஷையங்காருக்கு உரிய பரிகாரம் அளிக்க வேண்டுமென்று அன்றைய சென்னை கவர்னர் உத்தரவு பிறப்பித்தார். பின்னர், சேஷையங்கார் விதவை மறுமணத்திற்காக ஒரு அமைப்பை ஆரம்பித்தார். (இந்த வரலாற்றுச் சம்பவத்தின் முழு விவரங்கள் Express Weekend 6-10-90 இதழில் சிவபாதசுந்தரம் எழுதிய Hindu Widow Remarriage : A cause celebre என்ற கட்டுரையில் அடங்கியுள்ளன.)

சமகால நிகழ்ச்சிகளைப் பின்புலமாக வைத்து நாவல் எழுதிய ஆசிரியர் சேஷையங்கார், அந்தக் கதையில் காணப்படும் பாத்திரங்களின் பண்புகளுக்கு ஏற்றபடி

பெயர்கள் கொடுத்திருக்கிறார். வெட்டுணி, ஆகாவழி, வீரப்பிடாரி, பலாமுருடு, போகாவழி, துரோணர், அனு கூலன் போன்ற பெயர்கள் அந்தப் பாத்திரங்களின் இயல்பை விளக்குகின்றன. அம்மானை வடிவத்தில் எழுதப்பட்டிருந்தாலும், கவிதை நடையில் பேச்சு வழக்கி லுள்ள எளிமையான சொற்களே பயன்படுத்தப்பட்டிருக் கின்றன. கதைப் பாத்திரங்களுக்கிடையே ஏற்படும் சச்சரவுகளுக்கிடையே அவர்கள் கையாளும் வசைச் சொற்கள் அவர்களுடைய உணர்ச்சிகளைத் தெளிவாகப் பிரதிபலிக்கின்றன.

அன்றைய சமுதாயத்தில் விவேகமற்ற வெறுப்பும், பொறாமையும் கொண்ட தாயாதி உறவினர்கள் நாகரிக மற்ற முறையில் நடந்து கொண்டதற்கு அவர்கள் கையாண்ட வசைமொழிகளே அத்தாட்சியாகும். இவ் வகையில் அவதானியின் எதிரிகள் மேற்கொண்ட சொல் லாட்சி ஆசிரியரின் கலைத் திறனால் ஒரு சிறு அகராதி யாகவே அமைந்து விடுகிறது.

இந்த நாவலின் கதாநாயகனுக்கு முதலில் 'வினை யாளன்' என்ற பெயரிட்டிருப்பது ஆசிரியரின் ஆங்கில விமரிசன இலக்கியப் பரிச்சயத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு. முக்கிய பாத்திரம் என்ற முறையில் கதைப் போக்கில் பல நிகழ்ச்சிகளுக்குக் காரணமானவன் என்ற பொருள்படும் இந்தப் பெயர் ஆங்கிலத்தில் கையாளப்படும் **Protagonist** என்ற சொல்லுக்கு இணையானது. பின்னர் வினை யாளன் கல்வியில் தேர்ந்து பல விஷயங்கள் அறிந்து கொண்ட நிலையில் அவதானி என்ற பெயரை அடை கிறான். அஷ்டாவதானம், சதாவதானம் என்ற பட்டங் களைப் பெறும் அறிஞர்கள் வரிசையில் சேரும் தகுதி பெறும் தொடக்கத்தையும் இந்தப் பெயர் குறிக்கிறது. இன்றும் அவதானி என்ற பெயர் பழக்கத்தில் இருப்பதைக் காண்கிறோம்.

அன்று நிலவிய சமுதாய, ஜாதிக் கட்டுப்பாடுகளையும் ஆசிரியர் அவதானியின் மருத்துவக் கல்வியின் விளைவுகள் மூலம் சுட்டிக் காட்டுவது கதையின் நடப்பியல் அம்சத் திற்கு உயிர் கொடுத்து நாவலுக்கான இலக்கணத்தை அவர் அறிந்திருந்ததையும் விளக்குகிறது. கல்வித் துறை யில் பணியாற்றிய ஆசிரியர் மருத்துவப் பயிற்சியின் நுணுக்கங்களையும் நன்றாக அறிந்திருந்தார். ஓர் இலக்கிய வடிவத்தின் முதல் முயற்சி என்ற அளவில் ஆசிரியர் இவ்வகையில் பாராட்டுக்குரிய வெற்றி கண்டிருக்கிறார்.

அவதானி தேகத்தவயவங்கள் தான்பகுத்தே
அவதானமாக அவற்றுண்ணி லையறிந்தான்
ஆய்ந்தறியும் வேளை அவனிப் பிராமணர்கள்
வாய்ந்த மதக்குறும்பால் வண்மையில் மத்தி
மர்கள்
ஈங்கிவர்கள் பொங்கியெழுந்தாரே மேல்
வெகுண்டு,
ஆங்காரத்தோடே அவதானி முன்திரண்டு
உன் சாதியென்ன? உறுகுடியின் கீர்த்தியென்ன?
புன்சாதி செய்யும் புழுக்கைத் தொழிலிழைத்துச்
சாதி கெடுக்கும் சதிகாரா எங்கிருந்தாய்?
நீதி மதந்துறந்து நீங்கினாற் தோஷமில்லை
பிணந்தின்னியன்றோ பிணமறுத்துச்
சோதிப்பான்!

ஜாதி ஆசாரம் என்ற தளைகளால் கட்டுண்டு சுய சிந்தனையின்றி மக்கள் தவித்த அந்த நாட்களிலேயே அவதானி ஒரு புரட்சிக்காரனாக உருவெடுக்கிறான். சம்பிரதாயத்திற்கு அடிமையாகி, குடும்ப விரோதிகளுடன் சேர்ந்துகொண்டு தான் பெற்ற மகனையே வெறுத்துப் பழிக்கும் காந்தாரியின் செயல் அவதானியின் அறச்சினத் தைக் கிளப்பி விடுகிறது. போலிகளின் பாசாங்கில்

மயங்கிய தன் தாயாரை எதிர்த்து வாதாடும் நிர்ப்பந்தம் அவனுக்கு ஏற்படுகிறது. வெறும் சடங்குகளாலும் உண்மைக்குப் புறம்பான வெளித் தோற்றத்தினாலும் மக்களை ஏமாற்றுகிறவர்களின் விருப்பத்திற்கேற்பதான் நடந்து கொள்ள முடியாது என்பதை மனம் வெகுண்டு கூறுகிறான்.

கட்டுக் கட்டாகக் கனக்க விபூதியிட்டு
மட்டில்லா நாமம் வழித்துக் குழையலிட்டு
மாணிக்கப் பட்டையிட்ட வண்ணப்
பெருந்தூண்போல்
சாணுக்கு மேலகலச் சாயக் கரைபொலிய
ஒப்புந் துகிலுடுத்தி யோரைந்தும் எட்டும்சொல்லி
வைப்பாட்டி கொண்டையிலே வாடும்
மருவெடுத்தே
அம்மன் பிரசாதம் ஆத்துமா வீடேறும்
இம்மைச் சுகம் தருகும் இந்தாரும் என்று
சொல்லி
ஏமாற்றி மூடர்களை யெத்திப் பணம்பறிக்கும்
சீமான்கள் ஈங்கிவர்பின் தேடிநான்
போகவோகாண்?

அவதானியின் முற்போக்குச் சிந்தனைகளும் அன்றைய சமுதாய நிலையைப் பற்றி அவன் கொண்டிருந்த கருத்துகளும் தெளிவாக வெளிப்படுவதற்கும் அவன் தாயாரே மேலும் காரணமாகிறாள். அவனுக்குத் திருமணம் ஏற்பாடு செய்கிறாள். அவளுடைய திட்டப்படி அவதானி மணக்க வேண்டிய குடும்பத்தைப் பற்றி அவனுக்குத் தெரிந்த தகவல்கள் அவனுடைய ஒப்புதலுக்கு நேர் மாறாக இருக்கின்றன. தன்னுடைய மனத்திற்கு இசைந்த பெண்ணையே மனைவியாகக் கொள்ள வேண்டுமென்ற விருப்பத்தை வெளியிடுகிறான். தாய்ப் பாசம்

மிகுந்தவனாதலால் தன்னுடைய கொள்கையை மரியாதை யுடன் எடுத்துரைக்கிறான்.

தகப்பனொரு பேயன் தாயுமொரு பேமாலம்
சுகத்திற்குரிய பெண்ணோ சொல்லும் பலாமுரடு
பசிக்குப் பனம்பழத்தைப் பாராமற் றின்றிடப்பின்
மசக்கித் தலைசுழற்றும் வன்பித்தம் வாய்க்குமோ
தான்
மனதிற் கிசைந்தவொரு மங்கையவள் கிட்டினக்கால்
கனிவா யிருந்தெனது காலத்தைப் பின்னிடுவேன்
மனது கனியவில்லை மாதாநீ செய்யுமணம்
இனிதாகத் தோன்றவில்லை யென்றார் அவதானி.

அவதானியின் மனப்பான்மை காந்தாரிக்கு விபரீத மாகத் தோன்றுகிறது. தான் பல இடையூறுகளுக்கு இடையே கட்டிக்காத்து வளர்த்த புதல்வன் சம்பிர தாயத்தை எதிர்ப்பது அவளுக்குப் பிடிக்கவில்லை. ஜாதிக் கட்டுப்பாட்டைத் தன் மகன் மீண்டும் மீற முயல்வது அவளுக்கு ஆத்திரமூட்டுகிறது. மகனென்று கூடப் பொறுக்காமல் வசை பாடுகிறாள்.

அன்றைய சமுதாயத்தில் இன்றைய பாராட்டுக்குரிய அம்சங்களும் புலப்பட்டது, வியப்புக்குரியது. வரதட் சிணைக் கொடுமையை எதிர்ப்பவர்களுக்கு மகிழ்ச்சி தரும் செய்தியாகவும், பெண் விடுதலைக்கு ஓர் அடிப்படையாக வும் விளங்கிய ஒரு பழக்கம். தாய்ப்பாசம் தன்னுடைய எதிர்ப்பை விட வலிமையாக இருந்ததால், அவதானி "பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட" அந்தத் திருமணத் திற்கு இசைய வேண்டிய கட்டாயத்திற்கு உட்படுகிறான். ஆனால் வரதட்சிணைக்கு மாறாக அவனே மணப்பெண் ணுக்குப் பணம் கொடுக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. இது அன்று நிலவிய சமுதாய நியதி! ஒரு கல்யாணத் தரகரின் தலையீட்டால் அவன் இருநூறு ரூபாய் கொடுக்க

வேண்டுமென்று தீர்மானிக்கப் படுகிறது. அந்தத் தொகையை காந்தாரி சேகரித்த முறை :

ஒபுலுச் செட்டியிடம் ஓது கடன் நூறாகச்
சாபுல் உசேனிடத்துத் தண்டிய தீரைம்பதுடன்
கையில் பணஞ்சமையக் கல்யாணக் காரியங்கள்
மெய்யாகச் செய்து வந்தாள் மேன்மையுள்ள
காந்தாரி
தொப்பை முதலி கையில் சொல்லுந் தொகை
கொடுத்தாள்.

திருமணங்களில் கலகமும் பரஸ்பர வெறுப்பும் தலை தூக்குவது அன்று இயல்பாகவே இருந்தது. உறவினர்களின் பலதரப்பட்ட நோக்கங்களின் விளைவாகப் புகார்களும், வதந்திகளும் பரவுவதற்குச் சடங்குகளே காரணமாயிருந்தன. பொறாமையும், வெறுப்பும் நிறைந்த உறவினர்கள் அவதானியின் திருமணத்தில் தங்களுக்குக் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறவில்லை.

நாகவல்லி நாளில் நடந்தவொரு காரியத்தில்
சோகமுறவேது தொடர்ந்த தவதானியர்க்கும்
அடைகாய்ச் சுருளை அகவாயிற் கொள்ளுகையில்
மடக்கியே கண்கிட்ட வைத்தது தானறிந்து
கலியாணப் பெண்ணும் கருதியுரைக்க லுற்றாள்
வயிற்றெரிச்சற் பெண்ணுக்கு மாலைக் கண்ணா
முடையான்

இந்த நாவலின் ஆசிரியர் சேஷையங்கார் ஒரு முழுமையான சமுதாயச் சார்பு கொண்ட படைப்பாளி. இவர் வாழ்ந்த காலத்தில் நாட்டில் ஏற்பட்ட கலாசார மறுமலர்ச்சியின் தாக்கத்தைப் பெற்று சீர்திருத்தச் சிந்தனைகளில் ஈடுபட்டவர். தனக்கு விருப்பமில்லாத பெண்ணைத் தாயாரின் கட்டாயத்தினால் மணந்து துன்பப்படும்

கதாநாயகன், அறிவும் அழகும் நிறைந்த ஒரு பிற ஜாதிப் பெண்ணைச் சந்திக்க நேரிடும் போது நடந்து கொள்ளும் முறை ஆசிரியரின் தீர்க்க தரிசனத்திற்குச் சான்றாகிறது.

இந்தக் கவிதை நாவலில் தமிழ்நாட்டில் ஒரு பகுதியில் உள்ள கிராமங்கள், சென்னைக்குச் செல்லும் வழி போன்றவை தத்ரூபமாக வர்ணிக்கப்பட்டு நடப்பியல் உத்திக்கு உயிர் கொடுக்கிறது. மற்றும் பாண்டிச்சேரியைச் சுற்றியுள்ள இடங்களைப் பற்றிய தகவல்களும் மேலும் ஆராய்ச்சிக்கு உதவும். நெல்வேலி, சேஷையங்கார் போன்ற பெயர்கள் ஆசிரியரின் சமகால உணர்வையும் வாழ்க்கையிலிருந்தே அவர் கருப்பொருளை எடுத்துக் கொண்டதையும் குறிக்கின்றன.

கற்பனையின் அடிப்படையில் மக்களுக்குப் பரிச்சய மான அம்சங்களைக் கொண்டு புனையப்பட்ட இந்த நாவல் ஒரு சிறப்பான சமுதாய ஆவணம். இத்தகைய படைப்பு பல ஆய்வாளர்கள், விமரிசகர்களின் கவனத் திற்கு வராதது வியப்புதான். ஆங்கிலத்தில் விக்ரம் சேட் மரபு மீறி சாதித்ததை ஒரு முன்னோடி உத்தியைக் கொண்டு தமிழ் உரைநடை நாவலின் தோற்றத்திற்கு முன்பே இந்த ஆசிரியர் வெற்றியுடன் சாதித்து விட்டார். இவ்வகையில் இவரைப் பின்பற்றி பலர் கவிதையில் எழுத முன் வராததற்கு, இந்தப் படைப்பைப் பற்றி அதிகம் அறியப்படாததுதான் காரணம் என்று கொள்ளலாம். நாமக்கல் கவிஞரின், 'அவனும் அவளும்' கு. சின்னப்ப பாரதியின் 'தெய்வமாகி நின்றான்' என்ற கவிதைக் கதைகளை இவ்வகையில் குறிப்பிடலாம்.

கவிதையில் நாவல் எழுதலாம் என்றால், 'சிலப்பதி காரம்' போன்ற பேரிலக்கியங்களையும் நாவல் என்று சொல்லக் கூடாதா என்ற கேள்வி எழுப்பப் படலாம். நாவல் என்ற ஆங்கில வடிவம் சிலப்பதிகாரம் தோன்றி 1500 ஆண்டுகளுக்குப் பின்புதான் கையாளப்பட்டது என்பதை நினைவில் கொள்ள வேண்டும். தமிழில் நாவலைக்கவிதையில் எழுதிய முதல் படைப்பாளியான சேஷையங்கார் முதன்முதலில் சீர்திருத்தக் கருத்துகளைச் சமகால வாழ்வுடன் இணைத்துக் கதை சொல்லும் சிறப்பையும் அடைகிறார்.

*கோயம்புத்தூர்*<br>*டிசம்பர் 1994*

**பெ. கோ. சுந்தரராஜன் (சிட்டி)**<br>**சோ. சிவபாதசுந்தரம்**

# ATHIYURAVADHANI

*OR*

# THE SELF - MADE MAN

*An Original Tamil Novel,*

DELINEATING PICTURES OF MODERN HINDU LIFE

BY

*Professor Sashiengar*

MADRAS :

PRINTED AT THE SREEDHARA PRESS,

43, IRISAPPA MAISTRY STREET,

1875

ஸ்ரீ கருணாநிதயே நம:

# ஆதியூர் அவதானி சரிதம்

இஃது

இக்காலத்தில் ஹிந்துக்களுள் காணப்படும்

குணாகுணங்களையும் நடைகளையும்

வர்ண்ணித்து

## வித்துவான்சேஷையங்கார்

நவீனமாகவியற்றிய

கட்டுரைக்கதை

சென்னப்பட்டணம்,

ஸ்ரீதரமுத்திராக்ஷரசாலை

43, இரிசப்பமேஸ்திரி வீதி.

1875

TO

EYRE BURTON POWELL ESQUIRE, MA; C.S.I,
DIRECTOR OF PUBLIC INSTRUCTION, MADRAS.
And
Former Principal of the Presidency College :—
This little volume
is most respectfully inscribed
as a token of Esteem and Gratitude.
By
His most affectionate pupil and obedient servant

THE AUTHOR

# ஆசிரிய விருத்தம்

சீராருமகராணி விக்டோரியாவெனுஞ்
செல்விசெங்கோலினோங்கும்

தேசங்கள்பலவுளும் வீசுபுகழ்மேவுமித்
தென்னிந்தியா நாட்டிலே

ஏராரிளஞ்சிறுவர் வித்தையது கற்றுமன
விருளோட மருளோடவே

ஏற்றவப்பெருமாட்டி யாற்றலுடனாட்டிய
விருங்கலை வகுப்பினுக்கே

நேராருமதிகாரி யூணர்கல்வியைமுதல்
நேயமாயீங்களித்த

நிபுணராம்- அயர்பர்ட்டன்- பௌவல்துரைபாற்
கலைகள்
நேர்மையுடன் கற்றுணர்ந்த

பாராருமாணாக்கர் கூட்டத்தோரேழைநான்
பாடுமிச்சிறு நூலவர்

பண்பிற்குமிக்கபே ரன்பிற்குமீடாப்
பரிந்தங்கிதஞ் செய்வனே.

# PREFACE

Conceiving that an original Novel in Tamil delineating pictures of modern Hindu life would suit the taste of mycountrymen, in their present transition stage—a stage in which among other changes, old ideas are giving way to new ones and myths to facts—I have ventured to write and publish this little volume, in the hope that it may perhaps contribute to some small extent to that species of Tamil Literature which Modern Dravidian scholars aim at building up.

The tale is written not in prose after the model of European Novelists, but in an attractive popular form of verse, which our people are generally fond of.

The materials are taken from real life, but are glossed over a little with poetic varnish, and the language employed is simple and unpedantic.

PURSAVAKKAM.
18th January, 1875

D. S.

# முகவுரை

தமிழ்ப் பாஷையின் மூலமாய்க் கல்வியுங் களிப்புந் தேடும் இந்நாட்டவர் புறநாட்டவர் யாவர்க்கும் ஒரு மொழி பகருகின்றேன், ஆதரவுடன் செவி சாய்த்துக் கேட்பாராக. காவியங்களுங் கதைகளும், பல பல காலங் களில் நிகழ்ந்த வரலாறுகளை அல்லது நிகழ்ந்தனவாகப் பாவிக்கப்படும் வர்த்தமானங்களைத், தழுவி நிற்பன வாயினும், ஆக்கியோர்களின் காலத் தனுபவங்களை அவைகள் ஆங்காங்கு காட்டாமற் போகா. நான் சொல் வதற் கொரேயொரு நிதர்சனங் காட்டுவேன். ஆதியில் வான்மீகி முனிவர் இயற்றிய வடமொழி இராமாயணத் திலும், பின்பு கம்பர் புனைந்த தென்மொழி இராமா யணத்திலும், தேசவர்ண்ணனை ஜனவர்ண்ணனைகளில், பல குணபேதங்களையும் ஆசார பேதங்களையுங் காண லாம். இக்கலப்பு, கவிகளின் குணதோஷங்களைப் பன்னும் நிபுணர்களில் சிலர்க்கு விபரீதமாகவுந் தோற்றும். கற்பனைக் கதைகளும், ஒரு காலத்தில் இன்பந் தருவன. மற்றொரு காலத்தில் தரா; பாலர்க்குக் களிப்பூட்டுவன முதியர்க்கூட்டா ; சிற்றறிவோரை மகிழ்விப்பன பேரறி வோரை மகிழ்வியா. நம் தேயத்துச் சனங்களுள் குடதிசை நூல்களை ஆராய்ந்தறிந்தவர்கள் நமது புராணாதி கதை களுள் ஊற்றம் வையார். இந்நூதனக் கல்வித் துறைக ளறியாத நமது முதியரோ, இவர் மேல் வசை கூறுவர். மனிதன் சித்தவிருத்தி யிப்படியாக விருக்கும். நானோ வெனில் நமது வித்துவான்கள் வழக்கமாயிறங்குந் துறை களை விட்டுக் காலத்தியற்கையைத் தழுவிப் புதுத்துறை யில் காலிட்டேன்.

இதற்கு முன் யானியற்றிய ''குணாகரம்'' எனுங் காவியம் ''முதிய தமிழும்'' ''புதிய கருத்தும்'' அறிந்தார்க்கே யன்றிப் பிறர்க்கின்பந்தராது. பழம் பண்டிதர் மனதில் புதுக்கருத்துக் கொள்ளாது. புதுக்கலையில் தேர்ந்தோர்க்குப் பழம் பாஷை விள்ளாது. ஆதலால், யாவர்க்கும் பொருளும் புணர்ப்பும் எளிதில் விளங்கும்படி இந்நூலைச் செய்தனன்.

இதிலடங்கிய சங்கதிகள் பல இந்துக் குடும்பங்களில் இக்காலத்தி லுள்ளவைகள்தாம். ஆதலால் இது ''பொய்ப் பெயர் பூண்டு மெய்ப் பொருள் காட்டும்.''

அதனால், ''மெய்ப்பொருட்குரிய அப்பெயராளிகள்''
ஆங்காங்கு, ''தந்தமைச்சுட்டிய தருமங்காண்புழி
எந்தமைவாளா யிகழல்தகவன்று''
நல்லோராயின், ''உள்ளவைபுகலிற் கொள்வதுங் கடனாம்''
அல்லோர், ''எள்ளலையாமுந் தள்ளுதல் வழக்காம்.''

புரிசைப்பாக்கம்
1875 ஞூ ஜனவரி மீ } **தூ - வீ - சே.**

ஸ்ரீ

கருணாநிதயே நம:

# ஆதியூரவதானி சரிதம்

ஆதிபகவன் அடித்தலங்கள்தாம் போற்றி
சோதிச்சொரூபன் சுடர்ப்பதங்கள்தாம் போற்றி
வேதங்கட்கெட்டா விமலன் கழல் போற்றி
பூதங்கள் பூக்கும் புனிதனடி போற்றி
அண்டங்களாளும் அழகர் பதம் போற்றி
பிண்டங்கள் கூட்டும் பிரமனிரு தாள் போற்றி

எத்திறத்தோரும் இலங்குசமயிகளும்
முத்திறத்தோரும் முனைந்து படித்துவர
ஆணுடனே பெண்ணு மறிந்து களிகூர
ஆணுடனே பெண்ணும் அகமகிழ்ந்து கொண்டாட
காலத் தியற்கைதனைக் கண்டறியா மாந்தருக்குக்
கோலக் குறிவிளக்கும் கொள்கையுள்ள வொண்சரிதம்
ஆதியூர் வாழும் அவதானிதன் கதையை
வேதியன் நல்ல வினையாளன் தன்கதையை
வழக்கத் தமிழாலே மாந்தர் படித்தறிய
பழக்கத்தாலம்மானைப் பாட்டாகத்தாம்பகர

எழுதி முடிப்பதற்கே யீசனே முன்னடவாய்
பழுதில் கதைபாடப் பரமனே முன்னடவாய்.

சீர்மேவு சோழத் திருநாட்டிடைச் செழிக்கும்
ஏர்மேவு மூர்க ளெதிலுந் தனித்தோங்கும்
அத்தியூ ரென்னும் அழகு தலந்தனிலே
வித்தைகள்தாமோதி மெய்யறிவு மேல்வளர
எல்லோரும் போற்றி யிறைவனெனக் கொண்டாட
அல்லாதார்கூட அவன்பெருமை தாம்புகழ
உத்தமனென்பா னொருவன் குடியிருந்தான்
தத்துவ மெல்லாந் தனியறிந்த புண்ணியவான்.

ஆங்கவன் பெற்ற அருமைத் திருமகனாம்
வீங்கு புகழான் வினையாளன் தேசுடையோன்
பிறந்து மூவாண்டு பெருகி வளர்கையிலே
துறந்து பதமடைந்தார் சொல்லரிய தந்தையரும்.

வினையாளன் அன்னையவள் வீரமனமுடையாள்
நினைவாய்ப் பிழைப்பதற்கு நேரும் சமர்த்துடையாள்
தாயாதி வீட்டிலவள் தானிணங்கிப் பாடுபட்டு

ஓயாமுயற்சியுடன் ஓர்மகனைத் தான்வளர்த்தாள்
மாதாவின் மாலுமையால் வான்மகனுந் தான்வளர்ந்
தான்

தீதில் குணமுடையாள் சீராட்டித் தான்வளர்த்தாள்.
கருமை நிறமுடையான் கண்ணழகு தானுடையான்
பரந்த முகமுடையான் பால்வடியும் புன்னகையான்
விரிந்த வுரமுடையான் மெத்தெனும் மேனியுளான்
திருந்து முரையுடையான் செல்வன் வினையாளன்
கிட்டிய னோக்குடையான் கேள்வித் திறமுடையான்
மட்டிகள் வீட்டில் வருந்தியவன் வளர்ந்தான்.

பாழும் பிணிகளினால் பட்டதவன் கோடியுண்டு
சூழும் மதிகலங்கித் துன்புற்றாள் அன்புளதாய்
கரப்பான் குளிதோஷம் கண்ணழிவு மெண்ணவின்னம்
இரைக்குஞ் சுழிமாந்த மீடழிக்கும் பீடைகளால்
நித்தியங் கண்டமுண்டாம் நித்தியம் தான்பிழைப்பாம்
உத்தமி தாய்வயிற்றி லோயாமற் செந்தழலாம்.

பிள்ளை தனக்காகப் பீடழிந்து தாயவளும்
மெள்ளவே கால மெலிவுற்றுத் தள்ளிவந்தாள்.
கைப்பாடு பட்டுக் கனங்குறைந்து தாயவளும்
தப்பாமல் மைத்துனற்குத் தங்கைதனை மணந்து
தங்கை யுறவாலே தன்காலந் தள்ளிவந்தாள்.
மங்கை யுழைத்திருந்தாள் மைத்துனன் வாழ்குடியில்.

காலத்தா லாங்கவருங் கரியனொரு தம்பியுடன்
கோலக் குடிபெயர்ந்து கூழுக்கு மன்றாடி
ஆங்காங்கு பிச்சைக் கலைந்து மிகவருந்தி
வாங்காச் சமுசார வன்பிணியால் தாதுகெட்டுப்
புதுவை நகரணுகிப் புல்லையன் சத்திரத்தில்
வதிய விடமடைந்து வந்தவர்க்கும் போனவர்க்கும்
ஏச்சோறு பொங்கியிட்டே யேங்கும் வயிறலம்பி
மூச்சுண்டை விற்று முனைந்தொத்துப் பாடுபட்டுப்
பெரியம்மா சின்னம்மா பேசரிய தம்பியுடன்
பெரியய்யர் மெய்வருந்திப் பீடழியும் நாளையிலே
வினையாள னந்தவெறுங்குடி யில் தான்வளர்ந்தான்
வினையாள னங்கு மெலிவுற்றுத் தானிருந்தான்
சீறுமாறாக வந்தச் சிற்றப்பன் மார்நடத்த
ஊறுகள் தப்பி யொருபிள்ளை தான்வளர்ந்தான்

அப்பிள்ளை யென்றால் அருமைக் குணமுடையான்
ஒப்பாதவன் மனந்தா னூற்றைப் பணிகள்செய்ய
பிச்சைக்குப் போகவென்றால் பின்னிட் டவனழுவான்

எச்சிலெடுக்க வென்றா லேமாறித் தானழுவான்
ஒருவேலை செய்யவென்றால் ஒப்பாது பிள்ளைமனம்
இருகண்ணி னீர்சொரிய வேங்கித் திகைத்தழுவான்
கூழென்று சொன்னால் குமட்டி யருவருப்பான்
பாழும் வயிறதனைப் பட்டினி யாகவைப்பான்
என்னம்மா வென்பான் இதற்கென்ன செய்வதென்பான்
சின்னம்மா வென்றழுவான் சீவனினி வையேனென்பான்
தாயுங் கரைந்தழுவாள் தங்கையருந் தானழுவார்
தீய ரிருவர்களுஞ் சீற்றத்தால் கண்சிவப்பார்
வினையாளா நீயென்ன மேட்டி மகனொடா
கனவானாய்ப் போகிறையோ கட்டிவரு மெங்குடிக்கும்
காலனாய் வந்தாய் கரிக்காலா நீயுமிப்போ
பாலனோ பேச்சுப் படித்து வடித்துரைப்பாய்
கூடநீ வந்தால் கொடுப்பாரே தக்ஷணைதான்
ஓடிவா வென்றே யுறுமிப் பிடித்திழுப்பார்
இப்படி யாகவிவன் வருந்து நாளையிலே
துப்பான பெண்ணுக்குத் துன்வயது மேழாச்சு
வினையாளனுக்கு விரிபருவம் பத்தாச்சு
கனமாகப் பூணூல் கழுத்தில்விழ நாளாச்சு.
அன்னை பெயரும் அவள்தங்கை தன்பெயரும்
பின்னை அவள்கொழுனன் பேருமவர் தம்பிபெயர்
பெண்ணின் பெயரும் பெருங்குணமும் பேசாக்கால்
எண்ணி வருங்காதை யினிது விளங்காது
தாய்பெயரோ காந்தாரி தாங்காச் சினமுடையாள்
வாய்வந்த பேசிடுவாள் வன்சாபந் தந்திடுவாள்
முன்கோபந் தானுடை யாள் மூர்க்க மதியுடையாள்
தன்னைப் புகழ்ந்தவரைத் தாங்கச் சலியாதாள்
துட்டர்கள் தம்மைத் துணிந்து துறக்கறியாள்
கட்டியே வீண்டோரைத் தானேதழுவி நிற்பாள்
தன்மனங் கோணிற் றரியாமற் றானழுவாள்
பின்வருவ தோராள் பிடாரி யெனப்படுவாள்
ஈவிரக்கந் தானுடையாள் இட்டதனை விட்டுரைப்பாள்

சீவனுக்குத் தீங்கிழையாள் சீற்ற மிகவுடையாள்
உபகார மொன்றிழைத்தா லுள்ளளவுஞ் சொல்லிடுவாள்
அபகாரஞ் செய்தவரை யாற்றாமல் தூற்றிடுவாள்
அணுவளவு செய்தாலும் ஆற்றா தலப்பிடுவாள்
பணிவான சூதர்மனம் பாராமல்தான் பரிவாள்
மாறுபோல் தானுழைப்பாள் மற்றவரைத் தான்கடுப்பாள்
கூடுங் குணங்களிவை கொம்பனைக்குத் தானுமுண்டு.

மற்ற வணற்றங்கை மானாவதி யென்பாள்
சித்தம் புறத்துவிடாள் சீறுமா றொன்றுசெய்யாள்
எத்தாலும் தான்கலங்காள் ஏற்றவரை யாதரிப்பாள்
பத்தா சொற்றள்ளாத பத்தினி யாங்கவளும்
ஆங்கவளின் கொழுனர் அடங்காத வன்சினத்தர்
பாங்கறியா மாக்கள் பணித்தவண்ணந் தாம்புரிவர்
தாங்கும் பலமுடையார் தைரியந் தானுடையார்
ஓங்குந் துணிவுடையார் உள்ளத்திற் கள்ளமில்லார்
சாகசஞ் செய்யத் தணியாத் திடமுடையார்
யோகம் பழுத்தாலோ வோயாச் செலவுசெய்வார்
வாங்கச் சலியார் மனதில் விசாரம்வையார்
ஆங்காரங் கொண்டா லடமாடித் தான்விடுவார்
தானங் கொடுத்தாலோ தன்னுடையுந் தான்கொடுப்பார்
மானங் கெடுத்தாலும் மற்றொன்றும் மிஞ்சவையார்
வெட்டுணி யென்றுரைக்கும் வீரப் பெயருடையார்
மட்டி லடங்காத மாதர் மயக்குடையார்
அன்னவர்தம்பி யழியாக்கறுவுடையார்
இன்னல் விளைவிக்க வெடுக்கும் விரகுடையார்
இளைத்த வெறுமேனி யிருளடைந்த பாழுமுகம்
சளைத்த முதுகெலும்பில் தானொடுங்குந் தாழ்வயிறு
சுட்டெரிக்குங் கண்களுடன் தோன்றுமவர் நின்றவிடம்
வெட்டி நிலம்பார்த்தால் வெந்திருக்கு மேழடிதான்
குடும்பங் கலைக்கவல்லார் குண்டுணி யாமவர்பேர்
படுபாவ மெல்லாம் பலித்த வுருவமன்னார்.

வெட்டுணி தன்மகள்தான் வீரப் பிடாரியென்பாள்
பட்டணம் போதாது பட்டாங் கடிப்பதற்கு
நங்கு தெறிப்பதற்கு நாடெங்கும் போதாது
உங்காரஞ் செய்தா லுலக நடுங்கிடுமே
உன்னிக் கருவறுக்க வுள்வயணங் கோடியுண்டு
பின்னை வினையாளன் பெண்டாட்டிக் கெண்மடங்கு
கொண்டசமர்த்துடையாள் கொம்பரக்குப்பல்லுடையாள்
சணடைக்கு முன்வருவாள் தாய்க்கும் வெறுப்புடையாள்
தகப்பன் குணம்பொருந்தித் தானடக்குஞ் சண்டியவள்
இமைப் பொழுதுந்தீமை யிழைக்கா திருப்பதில்லை.

வீரப் பிடாரி விவாக நடக்கவேண்டும்
ஓரி மகன்றனக்கு மோர்சரடு போடவேண்டும்
என்றே நினைவுகொண்டார் ஏற்றமுள்ள வெட்டுணி
யும்
நன்றிது காலம் நமக்குப் பணம்பொறுக்க
உபாயந் தானென்றார் ஒருகொடிய குண்டுணியும்
உபாய மெதுதம்பீ யுரையென்றார் மூத்தவரும்
தம்பி யுரைப்பாராஞ் சாதுரியத் தோடெழுந்து
அம்பு வியில்மேலா மதிகாரி வீடுகளில்
பிள்ளை பிறந்தாலும் பெண் பெரியளானாலும்
சுள்ளி விழுந்தாலும் சூழ்விருந்து செய்தாலும்
ஒன்றுக்கு நூறாக வூர்க்குடிகள் கொட்டிடுவார்
கன்று மனத்தார் கடனுக்குக் கொட்டிடுவார்
காரறுப்புக்கம்பறுப்புக் கண்டுமுதல்கொள்பவர்போல்
பேர்பெரிய பட்டிமக்கள் பேசாமற் கொண்டிடுவார்
கைக்கடகம் நற்கொலுசு கண்டசர மோதிரங்கள்
மெய்க்குளிகை கழுத்துவடம் மேலாஞ் சரப்பளியும்
துப்பட்டா சாலுவைகள் சொக்கவெள்ளிக் கிண்ணி
களும்
செப்புக் கடாரமுதல் சேருந் தினுசுகளும்
வராகனுடன் மோராவும் வண்ணப் பதுமைகளும்
தராதரங்கள் பார்த்துச் சரியாகத் தண்டுவார்கள்

ஓரேர்ப் பயிராளி யொன்பது பொன்றருவான்
ஈரேர்ப் பயிராளி யீரெட்டு மூன்றழுவான்
மூன்றேர்ப் பயிராளி முப்பது பொன்னழுவான்
நான்கேர்ப் பயிராளி நாற்பது பொன்னழுவான்
பத்தேர்ப் பயிராளி பாங்காக நூறழுவான்
இத்திறமாக விருந்தனந் தாமழுவார்
கண்மூடி வாங்குங் கணக்கர்கள் நூறளிப்பார்
மண்ணோரஞ் சொல்லி வழக்கிடுவோர் நூறளிப்பார்
பொய்ச்சாக்ஷி சொல்லும் புரட்டர்கள் நூறளிப்பார்
பொய்ச் சீட்டெழுதும் புளுகுணிகள் நூறளிப்பார்
காவற் றிருடர் கணக்காக நூறளிப்பார்
பாவம் புரியும் பதடர்கள் நூறளிப்பார்
சதிகார ரெல்லாம் தலைக்கொரு நூறளிப்பார்
அதிகப் பணமுடையார் ஆயிரந் தாமழுவார்
வட்ட ஜமீன்கள் வரிசைகள் தாமெடுப்பார்
மிட்டாதா ரெல்லோரும் வேண்டுந் தனங்
கொடுப்பார்.

அப்படியாக வதிகாரம்ஒன்று மில்லை
செப்படு வித்தையில்லை தேடித்தனங் குவிக்க
ஒன்றே யுபாயமுண்டிங் குற்றதனைப் பற்றிடுவாய்
நன்றாய்ப் பணம்பறியும் நாணமுற்ற வாண்பயலால்
இச்சமயம் போனாலினிச் சமயம் நேராது
எச்சிற் பொறுக்கிசும்மா வேன்றா னிருக்கவேண்டும்
கையிற் பிடித்தவனைக் காசுள்ளோர் தம்மிடத்தே
ஐயா வுபனயன மாவதற்கு நீங்கள்துணை
செய்வீரென விரந்தால் செல்வர் தனங்கொடுப்பார்
பையப் பணஞ்சேர்த்துப் பண்பாக நீபயந்த
கன்னி மணமுங் கடன்காரப் பையனுக்குப்
பின்னை யொருசரடு போட்டாற் பெயரிருக்கும்
குண்டுணியுஞ் சொன்னார் குணமென்றார் வெட்டுணியும்
அண்டி வினையாளன் றன்னையழைத் தழகாய்
நாமமது பூண்டுநல்ல துணிதா னுடுத்தி

யோமெனு முன்னேநீ யோடிவா வென்றுரைத்தார்
நோக்க மறியாத நோஞ்சற் சிறுவனுடன்
போக்கில் மனமுவந்து போயினா னாங்கவர்பின்
பயமிலிளங் கன்றுபோலப் பாலனும்பின்றொடர்ந்தான்
நயமா யிரண்டுணியும் நற்சகுனங் கண்டுகொண்டு
குப்புசெட்டி யப்புசெட்டி குண்டுபிள்ளை நாகலிங்கம்
சுப்புபிள்ளை ரங்கராயன் சோமாசிப் பட்டன்முதல்
உண்டான பேர்களிடம் ஓயாமற்றா னடந்து
கண்டு கெஞ்சிக்கூத்தாடிக் காலரைகள் தாம்பிடுங்கி
குண்டுணி யுமண்ணனுமாய்க் கூடை பணங்குவித்தார்
கண்டுள்ளே காந்தாரி கண்கலக்கங் கொண்டிருந்தாள்.

அக்காள் மகனான அழிகண்ட னென்பவற்குத்
தக்கவொரு மகளைத் தாரைவிட்டுத் தான்கொடுத்தார்
வெட்டுணி தந்தமையன் வெங்கண்ணன் கையாலே
திட்டமாய்க் காந்தாரி செல்வனுக்கு நூல்புனைந்தார்.

தான்கற்ற வித்தையினால் சாதுரியப் பேச்சதனால்
மேன்மக்கள் பாலடைந்து வேண்டும் பணிகள்செய்து
நேராக வெட்டுணியும் நீண்ட புகழுடைய
பேராளூரென்னுங் கிராமப் பிரபுவிடத்துக்
காரியம் பார்க்குங் கணக்கராய்த் தானமர்ந்து
வீரியமாக மெலிவற்று வாழ்ந் திருந்தார்
நிலமுழுது வேளாண்மை நேர்தொழிலுஞ் செய்துவந்தார்
சோறென்று கண்டு சொகுசுமேற் காட்டலுற்றார்.
தேறு மனத்தவற்கோர் செல்வமகன் பிறந்தான்
தான்றோன்றி யென்றே தனையனுக்குப் பேருமிட்டார்
ஈன்ற வரம்மகனை ஏற்றமுடன் வளர்த்தார்
காந்தாரி யம்மகனைக் கண்ணாகத் தான்வளர்த்தாள்
தான்றந்த மைந்தனிலுந் தாட்டிகமாய் வளர்த்தாள்
வீரப் பிடாரியையு மேன்மையாய்த் தான்வளர்த்தாள்.

கோர மனமுடைய குண்டுணி கண்ணெரிந்து
கன்னி கழியாமற் காத்துநாம் நிற்கையிலே

சின்ன வினையாளன் சீராகத் தான்வளர்ந்து
காந்தாரி முண்டை கரவளத்தாற் பொச்சையிட்டு
பாந்த மதாகவவன் பள்ளியில் தான்படித்து
விழுவாள் மகன்றானு மேலவனாவ னென்றே
அழிகண்ட னோடே யடுத்துள்ளே யோசனைகள்
நூறு விதமாக நொய்யவர்கள் செய்துவந்தார்
தேறும் துணிவுகொண்டு தீமை புரியலுற்றார்
கொல்லைக் களைபிடுங்கக் கோட்டெருமை மேய்த்துவர
நெல்லுக் களங்காக்க நீரின் மடைமாற
பிள்ளை வினையாளன் தன்னைப் பிடித்திழுத்து
நொள்ளைப்பயலுனக்கு நோப்பாளமென்னவென்றே
அழிகண்டன் குண்டுணிகள் அச்சிறுவன் றான்வருந்தப்
பழிகாரர் வேலையிட்டுப் பார்த்து மகிழ்ந்திருந்தார்
அம்மை பொறுக்காளாம் ஆவி தரியாளாம்
விம்மி யழுவாளாம் மேல்விதியை நோவாளாம்
வெட்டுணி முன்னே விழுந்து முறைப்படுவாள்
பட்டேனே நானுமக்குப் பாரிமணஞ் செய்துவைத்தேன்
கனியுமென் நன்மகனைக் கைதூக்கி நீர்விடுவீர்
இனிக்குறை யில்லையென்று மெண்ணமிட்டு நானிருக்க
அழிகண்ட னுன்மருகன் ஆகாத குண்டுணியும்
பழிகார ரென்மகனைப் பார்க்கச் சகியாரே
பாலனைவேலையிட்டுப் பாடுகள் தாம்படுத்தி
ஆலைக் கரும்பெனவே யாட்டநீர் பார்க்கலாமோ
என்றழுது வாட விரங்கியந்த வெட்டுணியும்
ஒன்றுக்கு மஞ்சாதே வுன்மகனை யின்கலைகள்
படிக்கநான் வைத்திடுவேன் பள்ளியிலே யென்றுரைத்து
திடப்படச் சொல்லித் திருகுசினங் கொண்டதம்பி
மருகனையுங் கூட்டி மறைவாகத் தானிருத்திப்
பருவமிலாப் பையன வன்பாடுபடத் தக்கவனோ
பார்த்தோர் பரியாசம் பண்ணுவரே யெண்ணிநீங்கள்
வேர்த்தொன்றுஞ் செய்வதினி வேண்டா மெனவுரைத்
தார்

ஆங்கது கேட்டே யழிகண்ட குண்டுணிகள்
உள்ளுக்குள் ளாங்கவரும் ஓயாத் திருக்கிழைத்துக்
கள்ள மறியாத காந்தாரி மேற்கலகம்
தான்விளைத்துக்குண்டுணியும்கற்பனைகள்செய்துவந்தார்
ஈனம தியுடையார் ஏதேதோ செய்துவந்தார்
கோள்க ளொருகோடி கூசாமற் சொல்லிவந்தார்
நாளும் பகைவிளைத்து நல்லவர் போலிருந்தார்
வெட்டுணி தன்மனதை வேறாக்கித் தாம் கலைத்தார்
கட்டாகப் போதனைகள் காலமறிந் துரைப்பார்.
குண்டுணி யோர்நாள் குணமறியா வெட்டுணியைக்
கண்டே யொருவசனங் கற்பனையாய்ப் பேசலுற்றார்
நினையாய் நீயென்னுரையை நீசாகத் தான்மருந்து
வினையாள னென்றறிவாய் மெய்க்குடியில்
கொண்டிருந்தால்
காந்தாரி கற்பனையால் கல்வி பயிற்றவேண்டும்
ஆந்தாரங் கொள்ளவேண்டும் ஆனகுடி யாக்கவேண்டும்
ஆனகுடியாக்கவேண்டும் ஆங்கதனைக்காக்கவேண்டும்
மான மழித்திடுவாள் மாரா சியன்னையவள்
பழிபோட்டு மூக்கறுப்பாள் பட்டேனே பாவியென்பாள்
வழியொன்று கண்டால் மடிபிடிச் சண்டைசெய்வாள்
ஆகை யினாலே யவளுந்தன் மைந்தனுடன்
போக வழிதேடு புத்திகெட்ட வெட்டுணிநீ
நகத்தாலே கிள்ளுவதை நல்ல கோடாலிதன்னால்
அகழ்த் தல்லோ வெட்டவேண்டு மாங்கது வேர்பிடித்தால்
உரைகேட்டு வெட்டுணியு மோடிவந்துவீட ணுகி
விரைவிலே காந்தாரி! வீட்டைவிட்டுப்போடியென்றார்
உந்தன் மகனாலும் உன்னாலு மென்குடிக்கு
வந்த வெந்தீமைகளை மட்டிட்டுச் சொல்லலாமோ
கரிய னுனதுமகன் கால்வைத்த நாள்முதலாய்ப்
பெரிய குடிபெயர்ந்து பிக்காரி யானேனே
கூழுக் கழுதுங் குலைந்துநான் போனேனே
வாழுமனைக்கு வங்காய் வந்தாயே நிர்மூடி.

அவ்வுரை கேட்டே யவள்பதறி வாய்புலர்ந்து
வெவ்வுரை சொன்ன விதமேது மைத்துனரே
என்னாலே யல்லோ வினியகுடி நீரானீர்
என்னாலேயல்லோ நீரிந்தநிலையடைந்தீர்
பறக்கு மிலைதனிலே பாரக்கல் தூக்கிவைத்தேன்
நிறக்கவேகல்யாணம் நேராகப்பண்ணி வைத்தேன்
துட்டர் மதிகேட்டுத் துர்க்குண மேலாடி
வெட்டுணி யென்பதனை மெய்யாகச் செய்துவிட்டீர்
தங்கை யுறவால் தரிக்கலாம் பார்தனிலே
எங்குறை தீருமிளை ஞன்தலை யெடுப்பான்
என்றே யிருந்தே னிளக்காரங் கண்டீரே
நன்றியைச் சுட்டுண்ணும் நாணயத்தைக் கொண்டீரே.
சொன்ன வுரைகேட்டுச் சுறுக்கென்று வெட்டுணியும்
என்னடி வீணிடும்புகள் பேசலுற்றாய்
ஏழாண்டு காலமதாய் என்வளவில் நீயிருந்தே
ஏழாண்டு காலமதாய் இன்பமுறத் தின்கிலையோ
பிள்ளையும் நீயும் பிழைக்கவழி தேடினக்கால்
வள்ளல் தெரியுமடி வாய்ப்பட்டி யென்றுரைத்தார்.
வாய்ப்பட்டி யென்னலுமே வாராத துக்கம்வர
நாக்குழறிக் கைகால் நடுங்க மனம்பதறி
ஓகெடுவாய் பாவி யுனக்குநான் பட்டதெல்லாம்
வாகு கெடலாச்சே வஞ்சனையே மேலாச்சே
பிள்ளைக்கு நல்ல பிடிப்பென் றிருந்தேனே
கள்ளத் தனத்தையிப்போ காட்டினையே சண்டாளா
என்ன கதியடைவாய் ஈசனா ரில்லையோடா
பின்னைத் தெரியுமடா பேதையென் சாபமென்று
சாபமிட் டன்னை தனையனோடு வீடுவிட்டுத்
தூபமிட்ட பேய்போலத் தூரவழி தானடந்தாள்
அழுது மனங்கலங்க யாங்கவள் தானடந்தாள்
தொழுது பகவானைச்சோர்ந்தவள் தானடந்தாள்
சும்மாடு கோலிச் சுமைதூக்கித் தானடந்தாள்
அம்மை தளர்ந்தே யகநொந்து தானடந்தாள்

பிள்ளையைக் கையிற் பிடித்தவள் தானடந்தாள்.
வெள்ளமாய்க் கண்ணீர் விடுத்தவள் தானடந்தாள்.
வினையாள னெப்போது வேண்டுந் துணிவுரைப்பான்
கனமான தாயே கடுவருத்தங் கொள்ளாதே
ஈசனா ருண்டே யெவர்க்கும் படியளக்க
நேசத்தவன் பதத்தை நெஞ்சிலே நீநிறுத்து
சென்னை நகரணுகிச் சேமமடைவோ மென்றான்.
அன்னையு மவ்வா றழைத்து வருகையிலே
பொல்லாத பேதிகண்டு புத்திரனு மெய்மயங்கி
கல்லா லெறிந்தலைக்குங் கள்ளர்வதி காட்டில்
சூணாம் பேடென்னவுரை சொல்லுந் தனிக்காட்டில்
வாணா ளுலைக்கு மறவருறை நாட்டில்
களைத்து விறுவிறுத்துக் கைகால்கள் தாம்மடிந்து
இளைத்துக் கண்பஞ்சடைந் தேதில்லை யென்னும்
வண்ணம்

பாலன் படுத்ததனைப் பாவையருந் தானறிந்து
சாலைப் புறந்தனிலே தள்ளாடித் தான்பதறி
மூட்டை முடிச்சுகளை மூலைக்கு மூலைவீசி
சாட்டாங்க மாகத்தெய்வந் தன்னை மிகத்தொழுவாள்
ஆருமற்ற பாவி யடியேனைக் காத்தளிக்க
நேராதோ வென்றே யிருகண்ணி னீர்சொரிய
பதறுங் குரலுடனே பாழும்வன மொலிப்பக்
கதறி யழுதாளே கற்புடை மெல்லியரும்.

வழியில் வருமொருத்தி வாய்முறை கேட்டுருகி
அழியாதே நெஞ்சம்நீ யம்மணி யென்றுரைத்து
மைந்தன் றனையெடுத்து மார்பிலே கொண்டணைத்து
சுந்தரி வாவென்று சொல்லியே முன்னடந்தாள்.

அடுத்த கிராமத்திலே யாங்கவள் வீடதனில்
கிடத்திச் சிறுவனையுங் கிட்டியவ ளேதுசெய்தாள்
வயித்திய நூலறிந்த மாராசி யேதுசெய்தாள்
சயித்தியம் போக்குநல்ல சாரமுள்ள பச்சிலைகள்
பேதியைக் கட்டுநல்ல பேர்போன வேர்கொடிகள்

வாதத்தைத் தாக்குதற்கு வாய்ந்தநல்ல மூலிகைகள்
கொண்டு பெரும்பானை கொள்ளுஞ் சலத்திலிட்டு
மண்டு மழல்காட்டி வடித்த கஷாயமதைக்
கொடுத்தாளே யம்மன் குளிர்ந்த மனதோட
கொடுத்தாள் பகவானைக் கும்பிட்டுக்கொம்பனையாள்.

பால னுயிர்த்துப் பசிதாக மென்றழுதான்
கோல மனதுடையாள் கூட்டினாள் பத்தியமும்
பத்தியங் கூட்டியாங்கு பத்துநாள் தானிருத்திப்
பத்து நாட்குள்ளே யந்தப் பாலன்சுகமடைய
பாலன் சுகமடையச் சீலமனதுடையாள்
சாலவு பசரித்துத் தாயுடன் நன்மகனைப்
போக விடையளிக்கப் புந்தியுள்ள காந்தாரி
தேக பரவசமாய்ச் செங்கைகள் மேலெடுத்துத்
தெய்வத்தைப் போலவெண்ணிச் சீமாட்டியம்மையைத்
தான்
கையெடுத்துக் கும்பிட்டுக் கண்ணீரது ததும்பப்
போய்வருவோ மென்றே புதல்வனுடன்றான் நடந்தாள்
நேயம் மறவாமல் நீங்கிப் புறநடந்தாள்.

சென்னை நகரணுகித் தேரும் வினைகள் செய்து
மன்னு மகனை வளர்த்தாளே மாலுமையாய்
அன்னை யுமிவ்வா றருமையுடன் வளர்க்க
சின்ன மகனுஞ் செருக்குடன் றான்வளர்ந்தான்
செல்வர் மகன்போலச் சீர்மையுடன் றான்வளர்ந்தான்
வல்லமை கொண்டு வரிசையாத்தான் வளர்ந்தான்
தாயுடனே பிள்ளை தழைத்திங் கிருக்கையிலே
நேயமற்ற வெட்டுணிக்கு நேர்ந்த பலவிடும்பை.

பேராளூர் நாதன் பெருங்கடன் பட்டதனால்
வாரா வருத்தம்வர வண்மைகெட்டுப் பேரழிந்தே
ஆத்திக ளெல்லாம் அயலார்க்குத் தானழுது
தோற்றார் தம்மூர்தனையும் சொல்லுங் கடனிறுக்க.

கொண்ட வெசமானன் கோவப் பரங்கியவன்
குண்டுணி வெட்டுணியைக் கூப்பிட்டு நீங்களினி
ஊர்விட்டுப் போங்கள் உறுதொழில் பார்ப்பதற்கு
நேரு மனிதருண்டு நேயமுள்ள கேள்க ளென்றான்.

அச்சொல்லைக் கேட்டே யனியாயப் பட்டிவர்கள்
பச்சைப் பசும்பயிரும் பாய்ந்த கழனிகளும்
தொண்டைக் கதிர்ப்பயிரும் தோட்டக்கால்செங்கரும்பும்
அண்டை அயலுடனே யாய்ந்தகை மாற்றுகளும்
சகலமும் விட்டே தனித்தெங்கே போவதென்று
வகையாகத் தாமுரைத்த வார்த்தையவன் கேளான்
பரங்கிச் சனத்தைப் பரிவாகத்தான் கொணர்ந்தே
இரங்கா மனத்தானும் எங்கெங்குந் தானிருந்த
வேதியர்க ளப்போது வெந்துமன நொந்துருகித்
தாது கலங்கியவர் தங்கள் மனைமக்களுடன்
வலசையெடுத்தார்கள் வம்பருக் காற்றாமல்
பலவூ ரடைந்து பதிகண்டு தாமிருந்தார்.

வெட்டுணியு மப்போது வேங்கையூர் தானடைந்து
துட்டப் பரங்கிமேலே தோரா வழக்கெடுத்துத்
தாம்பட்ட கட்டமெல்லாந் தாவென்று வாதிழைத்து
வீம்பன் மேல்தீர்ப்பும் விறல்கொண்டு தாமடைந்தார்.

அந்தப் பரங்கியப்போ ஆனபொருள்க ளெல்லாம்
சுந்தையு மீராமல் கள்ளத் தனமுடனே
பந்துக்கள் பேராலே பார்த்தெழுதி வைத்துவிட்டுச்
சிந்தை மகிழ்ந்தே சிரித்தவன் கைவிரித்தான்
வெட்டுணியும் வாயில் விரல்வைத்துக் கொண்டழுதார்.

துட்டனாங் குண்டுணியும் சொல்லியே காட்டலுற்றார்
மாடு கன்றெல்லாம் மடிந்தன வெக்கையினால்
ஓடெடுத்து முன்போலத் தேடி யலையலுற்றார்
மதி கெட்டுத் தள்ளாடி வாடி வதங்கியவர்
புதுவைப் புறந்துறந்து போனார் வழிதேடி

அங்கிங் கலைந்தே யடுத்தரோ சென்னைநகர்
துங்க மதனியுறை சூழலைத் தாமடைந்தார்.

ஆங்கவள் கேட்டே அவர்பட்ட கஸ்தியெல்லாம்
ஏங்கி யிரங்கி யிருமென்று கையமர்த்தித்
தங்கை வருந்தத் தரியாமல் தான்பதறி
மங்கை யவர்களையும் வைத்தங்கே யாதரித்தாள்.
வெட்டுணி தானும் விதம்விதமா முயன்று
பட்டணத் துள்ள பணக்காரர் தம்மிடத்தில்
ஓடி யலைந்தே யுறுபணி தாமிழைத்துச்
சரக்குகள் வாங்கித் தரகரியா யமைந்து
வரத்துள்ள வேலைபல வாகாகப் பார்த்துவந்தார்.
அழிகண்ட குண்டுணிகள் ஆன. வினையாளன்
குழை கன்றுபோலக் குலவி வளர்வதனைப்
பார்த்துச் சகியாமல் பாலனிருப் பறிந்து
வேர்த்து மனம்புழுங்கி வீங்கற் பயலுமிப்போ
நோஞ்சற் பயலுமிப்போ நோக்கப் பகட்டாக
வாஞ்சையாய் முண்டை வளர்க்கப் பருத்தானே
ஆனை போலுட்பி யகமை மிகவடைந்து
தானிப்போ நம்மையொரு சட்டையுஞ் செய்யானே
என்றிந்த வண்ண மெரிந்துள நொந்தார்கள்
நன்றி சுட்டுத் தீமையது நாளும்புரிந்தார்கள்.
வினையாள னப்போ மிகையடைந்து கொக்கரித்து
கணியா னொருவரையும் கைகொட்டித் தானகைப்பான்

மானாவதி யறிந்து மருவும் புருஷனுடன்
ஈனருரை கேட்டே வீங்கிவரை வீட்டைவிட்டு
முன்னே துரத்திவிட்டு முடுகியவர் வந்திடத்தில்
சின்னத் தனமாகச் சேர்ந்திருந் துமும்மருகன்
தம்பியு முன்னருந்த தாயாதிக் காய்ச்சல்தன்னால்
துன்பமவர்க் கிழைக்கச் சோலிபல செய்கிறார்கள்
வினையாளனாங்கவரை வேண்டுமட்டும்பேசுகிறான்
நினையாமற் கூடியின்ன நேர்ந்திருக்க லாகாது

பச்சைமண் தன்னுடனே சுட்டமண் பற்றாது
லச்சைக் கேடாவதன்முன் நேரொதுங்கிநிற்கவேண்டும்
தனியே குடியிருந்து சாணொதுங்கி நாமிருந்தால்
இனியிவர்கள்செய்யு மிடைஞ்சலுக்குத்தப்பிநிற்போம்.

என்றது கேட்டே யிதுசரி யென்றவரும்
ஒன்றிடம் பார்த்தே யொதுங்கிக் குடியிருத்தார்.

அழிகண்ட குண்டுணிகள் ஆகட்டு மென்றிருந்து
வழியில் வினையாளன் வந்த பொழுதறிந்து
பதுங்கி மறைந்தவரும் பாலகனைத் தாமடிப்பார்.

அதுகண்டு மைந்தனப்போ ஆனைமுகன் பூனைமூஞ்சி
துங்கப் புலிகளென்னுந் தோழர்களைத்தானழைத்துப்
பங்கமடைந்ததனைப்பாங்காகத்தானுரைக்க
ஆகட்டு மென்றே யவர்கள் கறுவடைந்து
போக விடுத்தே புறத்தவர் தாமிருக்க
வினையாளன்றன்னையிந்த மிண்டரவர்கண்டறையப்
பனையேறிப்பாம்பெனவே பாய்ந்தார்கள்மற்றவர்கள்
குண்டுணிதன்னைக் குமைத்துப்பிழிந்தெடுத்தார்
மண்டையதுவீங்க வன்கல்லாற்குட்டிவிட்டார்
அழிகண்டன்றன்னை யறைந்துதைத்துவிட்டார்கள்
பிழியவழுதுகொண்டுபோனார்கள்பேதைமக்கள்.
வெட்டுணியண்டை விருவிருத்துத்தாமழுது
பட்டி மகன்செய் படுவினையைப் பாருமென்று
மூர்க்கன்வினையாளன் முன்பகையைத்தானினைந்து
மார்க்கமதில்வளைத்து வல்லாரைக்கொண்டடித்தான்

என்றஉரைகேட்டே யெரிந்தந்தவெட்டுணியும்
ஒன்றுமுரையாமல் ஓடிவந்துகாந்தாரி
சிறந்த மகனும் தெருவிலே கோலிகுண்டு
அறிந்தங்கேயாடும் அமையமதில்ஆங்கவனைக்
கன்னத்தறையலுமே கண்டுநின்றதோழரெல்லாம்
என்னத்துக் கென்றவரை யெதிரிட்டுத் தாக்கினார்கள்

நீங்கள்யார் போங்களென்று நெடியவர் தாமுரைத்தார்
நாங்க ளின்னார்களென்று நாய்மகனே சொல்வமென்றே
கல்லாலுங் கட்டியாலுங் கை குண்டுகோலியாலும்
எல்லாரும் தாம்புடைக்க விளைத்தவர் தாமெலிந்து
பற்றிச் சிலரைப் பதைக்கவே தானறைந்தார்
எற்றி யவர்கள் இரைச்சலிட்டு மேல்விழுந்தார்
மண்டன்னை வாரி மலர்க்கண்ணில் தூற்றிவிட்டார்
கிண்டரு மப்போ கிறுவெனத் தாஞ்சுழன்று
காலா லுதைத்திடுவார் கைகொண்டு தாமடிப்பார்
பாலர்க ளெல்லோரும் பக்கம் பறிந்திடுவார்.

பேருத்தி யானபெருஞ் சிறுவர் தாமறிந்து
நேரு மிடத்தினுக்கு நெறநெறனப் பற்கடித்துத்
துங்கப் புலியும்வந்தான் சோட்டாத் தடிபிடித்து
மங்காதவானைமுகன் மார்ச்சாலமுஞ்சிவந்தான்.

ஓயேய் பெரியோய் உமக்கென்ன கேடுகாலம்
சாயம் எடுத்திடுவோம் சாப்பாடுதான் கொடுப்போம்.

வந்த வழிபார்த்தே வகையாக வோடுமென்றார்
இந்த வினையாளன் எங்களுயிர்க் குயிர்பார்
என்றது கேட்டே யினியிருத்தல் மோசமென்று
துன்றுஞ் சனங்கள்தமைச் சூழ்ந்தவர் நோக்கியப்போ
அண்ணன் மகனிவனை யானடக்கி நல்லவழி
நண்ணும் படிக்குவந்தேன் நாணமற்ற பட்டிமகன்
துட்ட குறவுகொண்டு துன்மார்க்கந் தானிழைத்துக்
கெட்டினிப் போவானென்றே வெட்டுணி தாம்நடந்தார்

திட்டமாய்க் கேட்டவர்கள் சீயென்று திட்டியென்ன
மட்டிநீ யென்றுரைத்து வந்தவழி போனார்கள்.

வினையாள னப்போ விதியென்னக் கேட்டிருந்தான்
அனியாயப் பாவி யகந்தைக்குத் தான்வியந்தான்.

வீடடைந்து வெட்டுணியும் வெந்துருகித் தம்பியையும்
நாடுமழி கண்டனையு நன்காய்ப் புறமழைத்துத்
துட்டன் வினையாளன் சோலிக்குப் போகவேண்டாம்
மட்டி லிருக்கவேண்டும் வம்பிழைத் தீராமானால்
படுக்காளிப் பையனுக்குப் பக்கப் பலன்களுண்டு
அடுத்தவனைக் காப்பதற்கு மண்டைப் பலன்களுண்டு
சும்மா யிருங்களென்று சொல்லி மதியுரைத்தார்.

சும்மா யிருப்பாரோ சூதிழைக்கும் வஞ்சமக்கள்
உறவாடித் தான்கெடுக்க வுள்வயணந் தேடினார்கள்
மறைவாய்க்கொடுமைசெய்ய வன்சமயம்பார்த்திருந்தார்.

வினையா ளனப்போ விகடங்கள் தான்படிப்பான்
பணிவான பார்ப்பாரப் பாலரைப்போல் நடவான்
இரக்க நடவானாம் ஏங்கிக்கை யேந்தானாம்
பரக்க விழியானாம் பற்றிறந்து கெஞ்சானாம்
கெம்பீர மாகக் கெருவித்து நிற்பானாம்
அம்மா வடக்க வடங்கா திருப்பானாம்
தோழர்க ளோடு துடுக்குகள் செய்வானாம்.

ஏழை போல்தானும் இருந்திடும்பு செய்வானாம்
தத்தாரி யென்றுந் தறிதலைக் கொள்ளியென்றும்
எத்தாலும் தான்படியா னீனனிவ னென்றவனைக்
கண்டபேர் சொல்லக் கருத்தழிந்து காந்தாரி
துண்டரிகப் பிள்ளைதனைச் சூழ்ந்து பிடித்தவளும்
பாவி மகனே பழிகாரா வென்மனது
வேகவே நீயும் விடுபட்டி யானாயே
பங்காளி முன்னே பரிபவங் கண்டாயே
இங்கவர்க் கையோ விளக்கா ரமானாயே
தந்தை பெயரதனை மைந்தனீ தான்கெடுத்தாய்
மைந்தன் பிறந்து வரிசை குலைத்தாயே
இல்லாமற் போனாலும் ஏக்கமற்று நானிருப்பேன்
பொல்லாத பிள்ளைநீ போனாலும் நல்லதென்று

இழுத்து மகன்முதுகில் இருகையால் தானறைந்து
தழுத்தழு சொல்லாள் தலையி லறைந்துகொண்டு
கதறிப் புலம்பலுமே காளையும் கைதிமிறி
யுதறி யெறிந்தவனு மோடியே தான்மறைந்தான்.

அச்சமயங் கண்டே யழிகண்ட குண்டுணிகள்
கொச்சை நினைவால் குமரன் றனையணுகி
இங்குவா அப்பாநீ யெம்முரையைத் தட்டாதே
மங்கு மதியுடையாள் மாதாவோ வுன்றனுக்குப்
பாலனெனப் பாராமல் பாவி யடித்தாளே
கோல முதுகில் கொழுக்கட்டை போலாச்சே
இன்னம் மிருந்தக்கால் இப்படித் தானடிப்பாள்
பின்னைநீ யெங்கேனும் போய்விடா யென்றுரைத்தார்.

அம்மை மேற்சொல்லும் அவர்கள் முகநோக்கிச்
சும்மாநீர் போங்களெனச் சொல்லி யயல்நடந்தே
உள்ளங் கலங்கி யொருவீட்டுத் திண்ணையிலே
மெள்ள விருந்து விதியை நினைந்தழுதான்.

தாயும் வருந்தித் தவிக்கிறா ளென்பொருட்டால்
நாயினுங் கேடாய் நலங்கெட்டு நான்வளர்ந்தேன்
கல்வி யறியேனான் காலம் பழுதாச்சு
புல்லுந் தொழிலறியேன் புத்திகெட்டு நானிருந்தேன்
மதங்கொண்டு நானிருந்தேன் மாதாசொற் கேளாமல்
இதஞ்சொல்லி யென்னையினி யிங்கார்கை தூக்கவல்லார்

என்றுருகி நிற்கவெதிர் வீட்டு மாடியின்மேல்
நின்றுலவு பூபனருள் நெஞ்சுடைய கங்குரெட்டி
கங்கு ரெட்டிகண்டு கருணையுடன் றாழவந்து
இங்குவா பிள்ளாய்நீ யேனழுவ தென்றறைந்தான்.

கண்களி னீர்துடைத்துக் காளைமைந்த னேதுரைப்பான்
பெண்கள் சிகாமணியென் பெற்றதாய் போஷணையால்

துள்ளு குட்டியானேன் தொழிலொன்றுங் கற்றதில்லை
எள்ள வுடம்பெடுத்தேன் என்றாய் மனம்வருந்த
ஆண்டு பதினைந்தானேன் ஆணழகனாய் வளர்ந்தேன்
நீண்ட கலையறியா நிர்மூடன் நாட்கழித்தேன்
என்செய்வ தென்றே யிதயம் புழுங்குகின்றேன்
என்செய்தி யீங்கிதென்றே யேங்கி யழுதுநின்றான்.

இந்த மொழிகேட்டே யீர மனமுடையான்
மைந்த மயங்காதே மாண்பாக நீபடிப்பாய்
நித்தம் படிப்பதனை நேசமுட னென்மகற்குப்
பத்திரமாச் சொல்லிவைத்தாற் பாங்காக நானுனக்கு
மாத மைந்துரூபாய் வகையா யுதவிசெய்வேன்
கேத மினிவேண்டாம் கிளர்ச்சியுடன் வாசியென்று
சொல்லி யைந்துரூபாய் சொடுக்கெனக் கையிலிட்டார்.

மெல்ல மகனும் வெறுத்ததாய் முன்னணுகி
அம்மா வருந்தாதே யாண்டவ னின்னருளால்
செம்மைப் படவுதவி செய்தா ரொருவரென்று
தாயார்தங் கைக்கொடுத்துத் தத்துவத்தை மேலுரைத்
தான்.

தாயாரும் வாங்கித் தழைத்து மனங்குளிர்ந்தாள்
தன்மகனை வாரியவள் தானெடுத்து முத்தமிட்டாள்
தன்மகனை வாழ்த்தியவள் தான்மகிழ்ச்சி கொண்டிருந்
தாள்.

வினையாளன் சென்றானே மேதைப் புலவரிடம்
துணிவாகத் தான்படித்தான் தொட்ட நூலத்தனையும்
படித்ததனை ரெட்டிபெற்ற பாலனுக்குச்சொல்லிவந்தான்
படிப்பவர்க்குச் சொல்லும் பரிசிற்றிற மடைந்தான்
பாடங்கள் கேட்கப் பலசிறுவர் கூடினார்கள்
பாடங்கள் சொல்லிப் பயன்கண்டு பேரடைந்தான்
பார்புகழும் பேருடையான் பச்சையப்பன் பள்ளிதனில்
யார்வமுடன் வித்தை யடவாய்ப் பயின்றுவந்தான்

பரீக்ஷைகள் தந்து பரிசுகள் தானடைந்தான்
அரை க்ஷணம்வீணே யழியாமற் றான்படித்தான்
பச்சையப்பன் தர்மப் பரிபாலனத் தலைவர்
இச்சிறு வன்றன்னை யினிய துரைத்தனத்தார்
சாத்திர சாலையினில் தான்கற்றுத் தேறுதற்கே
யேற்றவ னென்றே யிருநிதி தானுதவி
அனுப்ப வினையாள னாங்கணுகித் தான்படித்தான்.
தனக்குள் மகிழ்ந்து தளர்வின்றித் தான்படித்தான்.

அக்கழக நற்றலைவர் ஆச்சரிய நற்குணத்தார்
துக்க முகங்கண்டால் துவளு மனமுடையார்
கருணைப் பெருக்குடையார் கற்பிக்கு நேர்மையுள்ளார்
அருணன் றன்கோமான்போல் ஆழ்ந்தவிருளோட்டவல்லார்
ஊணர் கலைக ளொருங்கறிந்த வானிதியம்
காண்போ ரருந்தக் கறந்தளிக்குங் காமதேனு
முகத்திற் குறியறிந்து முதிர்ந்த வறிவதனால்
அகத்தில் நிகழ்வதனை யாராய்ந்து தாமறிவார்
தன்கீழ்ப் படிப்பவரின் தன்மைகளைத் தாமறிவார்
அன்பா யவர்கள் அளவறிந்து நூலுரைப்பார்
பைந்தேன் ஒழுகுமொழி பால்வடியு நீண்டமுகம்
சிந்தை விசாலநெற்றித் திண்மை நெடுங்கரமும்
கண்டோர் மனமுருக்குங் கற்பவர் மெய்க்கனிவுக்
குண்டோ குறையொருக்கால் ஓதுவிக்கு நல்லகுரு
குணங்கள் பலபெருக்கிக் குற்றங் குறைத்திடுவார்
இணங்கா முரடர்களும் ஈங்கிவர்க்குத் தாம்மசிவார்
உள்ளே கறுக்கொண் டொருதீங்கு தாம்புரியார்
மெள்ளக் களையகற்றி மேம்பயி ரோம்புவார்போல்
நாளு மதியுரைத்து நல்லவழி புல்லவைத்து
நாளு மனப்பயிரை நன்கு வளர்த்துவந்தார்.

ஏழைச் சிறுவருக்கு மேற்கு முதவிசெய்வார்
மொழை மதியும் முழுமதி யாக்கிடுவார்

ஈன்ற வொருவனைப்போல் எல்லோர் தரமறிவார்
ஈன்ற வொருத்தியைப்போல் ஏற்றபே ரன்புவைப்பார்
ஆசான் துரோணனென்பார் ஆய்ந்த கலைபயிற்ற
நேசமா யெல்லோரும் நேருறத் தாம்பயின்றார்.

வினையாளனப்போ வினையமுடன் றான்பயின்றான்
கனிவாக வாசான் கருதும்படி நடந்தான்
எல்லோர்க்கும்முந்தியிருங் கழகந்தான்புகுவான்
எல்லோர்க்கும் பிந்தி யிருந்தவன் தான்படிப்பான்
உரைத்தவை யெல்லாம் உருவிட்டுத் தான்படிப்பான்
தரித்திர புத்தியென்று தன்னை வெறுத்திடுவான்.

நாளுமிவன் செயலை நன்றாய் நினைந்துகலை
ஆளுந் துரோணரவர் ஆச்சரிய முள்ளடைந்தே
அன்பா யருகடைந்தே யப்பாவுன் மெய்ச்சரிதம்
என்பாலு ரைப்பாயென வேழைச் சிறுவனப்போ
தான்பட்ட பாட்டைத் தலைக்கட்டிச் சொல்லிநின்றான்.
தேன்பட்ட வின்சொலினால் தேற்றிக் குருவுரைப்பார் :

வையகத்தி லுன்போல் வருந்தினார் வாழ்ந்திடுவார்
மெய்யாய்த்தலையெடுப்பாய் மேலேசுகம்பெறுவாய்
உழைக்கச் சலியாதே யுற்றதுணை நானுனக்குப்
பழிப்பில் நெறியிலிரு பாலவெனச் சொல்லியவர்
சீவனஞ் செய்வதற்குஞ் செல்லுந் தனமுதவி
நாவலர் மைந்தனுக்கு நல்ல மதியுரைத்துச்
சிறுவருடன் கூடச் சேர்த்துக் கலைபயிற்றிப்
பொறுமையுடன் தனியே பின்னுங் கரைத்துரைத்தே
ஆன குருவருள ஆங்கவ னாடோறும்
ஞான மதில்பெருகி நற்குணங் கொண்டிருந்தான்.

சாத்திரங்கள் கற்றான் தமிழ்நூல்கள் தானறிந்தான்
பார்த்தவர்கள் மெச்சப் பலவர்க்குத் தானுரைத்தான்
தன்கீழ்ப் படித்தவரைத் தன்னைப்போ லாக்கிவைத்தான்

மின்னுந் தமிழதனில் மெய்ப்புலவ னாயிருந்தான்
தமிழருமை கண்டதனிப்புலவ னாயிருந்தான்
தமிழருமை கண்டு சபைமெச்சப் பேசிவந்தான்
அவதானஞ் செய்தே யரிய புகழடைந்தான்
அவதானி யென்றே யழகுபெயர் வாய்ந்திருந்தான்
துரோண ருரைத்தபடி தூய வழிநடந்தான்
அரணா யவரிருக்க அல்லல் தொலைத்திருந்தான்.

ஊணர் வயித்தியங்கள் உள்ளபடித் தான்பயின்று
காண மனந்துணிந்து கனிவுடைய சற்குருபால்
கருத்தை வெளியிடவே கற்றவரும் மற்றுவந்து
மருத்துவச் சாலையிலே வைத்தார் மகன்றனையும்
உடற்கூறு கண்டே யுயிருலவும் போததனில்
நடக்குந் தொழில்களையும் நாதன்கைநேர்மையையும்
நோய்கள் வரும்வழியும் நோய்கள் படுமுறையும்
நேய மருந்துகளும் நேரிரண மாற்றும்வகை
ஆய விவையெல்லாம் அவதானி கண்டறிந்தான்
ஓயா முயற்சியுடன் உள்ளபடி கண்டறிந்தான்
அவதானி தேகத் தவயவங்கள் தான்பகுத்தே
அவதானமாக வவற்றுண் ணிலையறிந்தான்.

ஆய்ந் தறியும்வேளை அவனிப் பிராமணர்கள்
வாய்ந்த மதக்குறும்பால் வண்மையில் மத்திமர்கள்
ஈங்கிவர்கள் பொங்கி யெழுந்தாரேமேல்வெகுண்டு
ஆங்காரத் தோடே அவதானி முன்திரண்டு
உன்சாதி யென்ன உறுகுடியின் கீர்த்தியென்ன
புன்சாதி செய்யும் புழுக்கைத் தொழிலிழைத்துச்
சாதி கெடுக்குஞ் சதிகாரா வெங்கிருந்தாய்
நீதி மதந்துறந்து நீங்கினாற் றோஷமில்லை
பிணந்தின்னி யன்றோ பிணமறுத்துச் சோதிப்பான்
பிணந்தீண்டத் தீட்டுப் பிடியாதோ பார்ப்பானை
பார்ப்பானோ நீயும் படித்த பறையனென்றார்

ஆர்ப்பாட்டஞ் செய்தே யவர்கள்வளைந்துகொண்டார்
கவிசிங்க மப்போ கருத்திற் பயமொழிந்து
விவிதமா ஞாய விவரங்கள் தானெடுத்துக்
காட்டி விரித்துக் கசடர் மனந்தெளிய
நாட்டிற் கிதம்புரியு நல்வினை யென்றெடுத்துச
சொல்லியே வாய்மடக்கத் தோஷமிலை யென்றவர்க
எல்லாரும் போனாலும் ஏறா மடைக்குத்தண்ணீர்
பாய்ச்ச முயலும் பதடிக ளெத்தனைபேர்
தீய்ச்செயல் சோறாகத் தேடுபவர் எத்தனைபேர்
தாயாதிக் காய்ச்சலினால் தஞ்சமயம் பார்த்திருந்த
தீயர்க ளெல்லாரும் சேர்ந்தார்கள் சற்பனைக்கு
வெட்டுணியுங் குண்டுணியும் வீணழி கண்டனுமாய்க்
கட்டாகத் துட்டர்களைக் கட்டித் திரண்டுவந்தே
அவதானி வீட்டை யவர்கள் வளைந்துகொண்டு
அவதானி தன்னை யழித்திடுவோ மென்றுநின்றார்.

ஆங்கதனைக் கண்டே யவதானி யென்னசெய்தார்
பாங்குடனே கொல்லை வழியாகத் தான்பறிந்து
மதியுள் துரோணருடன் மந்திரந் தான்புரிந்து
அதிகாரி பாற்சென் றடங்கலுந் தானுரைத்துச்
சந்தடி யின்றித் தலையாரிக் காவலுடன்
வந்து வளவடைந்து வம்பர்களைக் கைப்பிடித்துப்
பிணைகள் தரக்கொண்டு பேயர்களைத் தாம்விடுத்தார்
பிணைகள் கொடுத்தவரும் பேசாமற் போய்மறைந்தார்.

மறைந்தாலு மென்ன மனத்துட் கறுவுடையார்
துறந்தா னிவன்குலத்தைத் துட்டனெனப்பேரெழுப்பிச்
சாதிவிட்டு நீக்குதற்குச் சற்பனைகள் தாமிழைத்தார்
போதனைகள் செய்து புறத்திருந்து தீங்கிழைத்தார் .

கவிசிங்க மப்போ கருதுவார் தம்மனதில்
புவியில் மதங்களென்று பொய்யனுட் டானமென்று

மாசுள்ள நெஞ்சரன்றோ வேஷங்கள் தாம்புரிவார்
சீசீ யீதென்னவென்று சிந்தை யொழிந்திருந்தார்
பெற்றவ ளப்போது பேத மனதுகொண்டு
புத்திரன் மாட்டுப் புழுங்கியே யேதுரைப்பாள்
பிணமறுத்துப் பார்த்தால் பிசகிது ஞாயமன்று
குணமன்று பிள்ளாய் குரங்குப் பிடிவேண்டாம்
ஊரோட வொக்கவுநீ யோடல் தகுதியென்றாள்.

நேராகத் தாயுரைத்த நீள்வசனம் தான்கேட்டு
கவிசிங்க மப்போது காட்டியொரு வார்த்தைசொல்வான்
அவதானி யப்போ தருந்தாய்க்கு நீதிசொல்வார்
குருட்டுச் சனங்களுடன் கூடவோ போவதம்மா?
திருட்டுப் பயல்வேஷந் தேர்ந்தோர் மருவுவரோ?

வெளிச்ச மதுபோட வேண்டாதே யென்மனந்தான்
ஒளித்துப் பிசகுசெய்ய வொப்பாதென் னுள்ளமம்மா
கள்ளைக் குடிப்பவருங் கைமோசஞ் செய்பவரும்
உள்ளத்து ளொன்றா யுதட்டொன் றுரைப்பவரும்
கொடுத்தவன் சாகவென்று கோரும் பெரியவரும்
எடுத்தறு தக்கவென்றே யெண்ணமிடும் புண்ணியரும்
பிறருடைய வாழ்வு பொறுக்காத பேதையரும்
பிறர்பொருளை வவ்வுதற்குப் பேராசை கொள்பவரும்
பொய்ச்சாக்ஷி சொல்லிப் பிழைக்கும் புரட்டர்களும்
இச்சகம் பாடி யிருந்துண்ணும் பாவிகளும்
வக்கணை பேசி வழிச்சண்டை கிண்டிவிட்டுக்
கைக்கொள்ளை கொள்ளுங் கடன்காரப் பேயர்களும்
திண்ணைகள் தூங்கித் திடங்கெட்ட மாக்களைக்கண்
டுண்ணிகள் போல உறுக்கும் பதடர்களும்
கொடுத்தவிடம் வாழ்வு கொடாதவிடம் கல்லெடுப்பு
வடிப்பமாய்ப் பேசிவரும் வல்லடி வம்பர்களும்
அடுத்துக் கெடுப்பவரும் ஆகாத செய்பவரும்
தொடுக்கும் வழிகளுக்குள் துட்டவழி நாடுவோரும்
பொய்யாணை யிட்டுப் பொறுத்தார்க்குத்தீங்குசெய்தும்

ஐயோவென் றெண்ணா அனியாயப் பாதகரும்
கட்டுக் கட்டாகக் கனக்க விபூதியிட்டு
மட்டில்லா நாமம் வழித்துக் குழையலிட்டு
மாணிக்கப்பட்டையிட்ட வண்ணப்பெருந்தூண்போல்
சாணுக்கு மேலகலச் சாயக்கரை பொலிய
ஒப்புந் துகிலுடுத்தி யோரைந்து மெட்டுஞ்சொல்லி
வைப்பாட்டிகொண்டையிலே வாடும்மருவெடுத்தே
அம்மன் பிரசாதம் ஆத்துமா வீடேறும்
இம்மைச் சுகந்தருதும் இந்தாரு மென்றுசொல்லி
ஏமாற்றி மூடர்களை யெத்திப் பணம்பறிக்கும்
சீமான்கள்ஈங்கிவர்பின் தேடிநான்போகவோகாண்?

இப்படிப் பட்டவர்க ளெத்தனைபேர் நங்குலத்தில்
செப்படு வித்தைகாட்டிச் சீவனஞ் செய்பவர்கள்
அப்படிக் கொன்றறியேன் ஆகாத காரியங்கள்
துப்பா மென்வித்தையினால் சுகசீவி யாயிருந்து
தத்துவங்கள் ஆய்ந்தால் தரணியிற் றீட்டுமுண்டோ!

வித்தகன் கைவேலை விரித்தறிந்தாற்குற்றமுண்டோ
பிணத்தீட்டுப்போவதற்குப்பின்னவினையில்லையோ
தான்
குணக்கு மனத்தவர்கள் கூறுவதுங் கோணலன்றோ
நிறைந்த வுயிருலவு நேயமுள்ள இவ்வுடலைக்
குறைந்த குணத்ததென்று கூறுவதும்புன்மையன்றோ?

ஈசன் கரத்தமைந்த வெண்ணரிய விவ்வுடம்பை
சீசீ யெனத்தொலைத்தல் சிட்டர்கள் செய்கையாமோ?

ஆன்மா பிரிந்துவிட வைம்பூத வாக்கையிது
தான்மாத் திரமிராது தக்கதன் மாத்திரையாய்
பிரியுஞ் சமயம் பிணநாற்றந் தானெடுக்கும்
எரியிடா விட்டாலே யெங்கும் விஷமாகும்
என்பது கொண்டே இருந்த பெரியோர்கள்
என்பளவாக வெரியிடுக வென்று வைத்தார்.

மற்ற வுயிர்கள் மரித்தக்கால் ஆங்கவற்றைச்
செத்த வுடனே சேமிப்பார் தின்றொழிப்பார்
ஏனம்மா வீட்டில் எலிகள் பெருச்சாளி
ஈனப் புழுக்கரப்பு மெத்தனையோ சாமவைக்கு
வீடே சுடுகாடு மேலாம் மனிதருடல்
காடே கழியவேண்டும் கைதொட்டால் தீட்டுமுண்டு?
அற்ப வுடல்போல் நம்அங்க மழியாது
சொற்பக் கடிகையிலே துர்நாற்றம் போகாது
காக்கை கழுபிடுங்கக் கண்டு சகியார்கள்
ஆக்கை யதனால் அரிய வரிசையுண்டு.

பாக்கிய முள்ள பரமன் படைப்பதனில்
மீக்கோள் ளறிவால் விளங்கிடு மின்னுயிர்தான்
உவந்து வசிக்கு முடலுக்குத் தீட்டுமுண்டோ!
கவந்தங்கள் பேச்சால் கலங்காதே தாயேயென்றார்.

கட்டுரை கேட்டுமந்தக் காந்தாரி சம்மதியாள்
நெட்டுயிர்ப்போ டுள்ளமது நெக்குருகித் தானயர்ந்தாள்.
ஊர் வாயைமூட வுலைமூடி யில்லையென்று
தேராம லம்மை திடங்கெட்டு நிற்கையிலே
ஒருறுதி செய்ய வுளத்திலே தான்மதித்தாள்.
சீராம் மகற்குத் திருமணஞ் செய்துவைத்தால்
பேரா முறவாகும் பின்பலமே வுளதாம்
சாதியார் கைசலித்துத் தாமே யடங்குவார்கள்
சூதிது வென்றே துணிந்தாளே காந்தாரி.
காந்தாரி யம்மன் கருத்துக்குத் தானிசையப்
பாந்தமாப்பெண்கொடுக்கும் பண்புடையவொண்
கிளைஞர்
போகா வழியென்று பூண்டபெய ரந்தணரும்
ஆகா வழியாம் அவர்மனைவி தன்னுடனே
பலா முருடென்னும் பரிவுள்ள பெண்ணுடனே
குலாவி யிருக்குமொரு கூலங் கிஷமறிந்து

காந்தாரி யம்மன் கடுகியவர் பாலடைந்து
ஆந்தரஞ் சொல்லி அரியமகன் றனக்குப்
பெண்ணைக் கொடுத்தே பெரியகுடி யாக்கவேண்டும்
கண்ணைக் கொடுத்தே கனத்தகுடி யாக்கவேண்டும்
சம்பந்தஞ் செய்தே தழைத்தகுடி யாக்கவேண்டும்
நம்பி நீரிந்தசுபம் நாளையே செய்யவேண்டும்
குலத்தை யறியவேண்டாம் கோத்திரந் தேடவேண்டாம்
கலப்பதி னத்திலென்றால் காணுஞ் சகுனமில்லை.

இவ்வார்த்தை கேட்டே யிருவழியுஞ் சம்மதித்துச்
செவ்விதா மென்றுரைத்துச் சிந்தை களித்தார்கள்.

ஆனாலு மொன்றுரைப்பேன் அம்மணியே கேளென்று
தானாகச் சொல்வாளாம் தன்வழியே போமடந்தை
உன்பிள்ளை யிப்போ துலகமெல்லாம் பழிக்க
என்பு தோல் கீண்டிங் கிருக்கிறான் புத்திகெட்டே
அவனுக்குப் பெண்கொடுத்தால் ஆரார் நகையார்கள்
புவன நகையாதோ போடிபோவென் றுரைத்தாள்.

அவ்வார்த்தை கேட்க அகங்கொதித்துக் காந்தாரி
சவ்வாசு கெட்டியடி சண்டியென்ன பேச்சுரைத்தாய்
என்மகனை யேசுதற்கே இவ்வூரிலார் துணிவார்?

நன்மகனைச் சொல்லுதற்கும் நாவெழுமோ மாந்தருக்கு
ஞானி யவனாச்சே நல்லோர்க்குக் கண்ணாச்சே
மானி யவனாச்சே மற்றவன்மேற் குற்றமுண்டோ
ஆகா வழிநீதான் ஐந்தறிவுங் கெட்டையென்றாள்.
போகா வழியும் பொறுப்பாயெனப் புகல்வார்
இங்கு வாயம்மாநீ யென்மனைவி புத்திகெட்டாள்
மங்கு மதியுடையாள் வாக்குவழி யொன்றறியாள்
வினையாள னுன்மகனும் வேதாந்தப் பேச்சொழித்துத்
தனியே சம்பாதனைக்குத் தக்க முயற்சிசெய்தால்

எத்தொழி லானாலு நற்றொழி லாகுமம்மா
செத்த பிணமறுத்தால் தீங்கொன்றும் நேராது
நாய் விற்றகாசு குலைக்குமோ நன்னுதலே
பேய்கட்டு வீடு பிலன்கெட்டுப் போகுமோதான்
எந்த வழியாலு மேற்றதனங் குவித்தால்
வந்திடுவார் சுற்றம் வரிசை முறைமைகொண்டு
பரிவுடனே யெந்தம் பலாமுருட்டை நாம்கொடுத்தால்
உரிய பணயமென்ன வோதென்றா ராங்கவரும்.

ஆகா வழியுரைப்பாள் அப்படியும் வார்த்தையுண்டோ?
நாகரிகங்கொண்டிருக்கும் நாமும்பெண்விற்கலாமோ?
உள்ள பணிபூட்டி யுன்மனதுக் கேற்றபடி
கொள்ளடியோபெண்ணையென்றாள் கூசுங்குண
முடையாள்.

கையமர்த்தி யப்போது கன்னிகைக்குத் தந்தையரும்
பைய வொருவார்த்தை பாங்காகத் தாமுரைப்பார்
இருநூறு ரூபாய்நீ யென்கையிற் போடவேண்டும்
இருநூறு ரூபாய்க்கும் ஏற்றநகை பூட்டவேண்டும்
கலியாண முங்கள் கணக்கிலே சேரவேண்டும்
சலியாமல் நாங்களும் பெண்தன்னை யளித்திடுவோம்.
இச்சொல்லைக்கேட்டே யிளங்கொடியுமே
துரைப்பாள்

சிச்சீ பணங்கேட்டீர் சின்னத்தனமாக
மதி யெங்கேபோச்சோ மகளையும் விற்பீரோ
அதி யாசையாலே யடிமாண்டு போகீரோ
போம்போ மெனவுரைக்கப் போகா வழியெழுந்து
ஆம்போநீயென்னறிந்தாய் ஆகாததொத்த
லுன்னூர்ப்
பேரென்ன வுன்றன பெரியதனந் தானுமென்ன
சீரென்ன செல்வமென்ன சீமை யறியாதோ
உடுக்கத் துணியுமற்றாய் உண்ணப் பிடியுமற்றாய்ப்
படுக்கப்பாய்தானுமற்றாய் பட்டாங்கடிக்கிறையே.

ஐயரது சொல்லலுமே யாகா வழிரைப்பாள்
பொய்யோநீர்சொல்வதெல்லாம் புண்ணியரே
நீர் தாலி
கட்டினநாள்முதலாக் கண்டசுகமெத்தவுண்டோ
பெட்டிமகனுமக்குப்பெண்டொருத்திவாய்த்தேனே.

பத்தாவுங் கேட்டுப் படபடத்தங் கேதுரைப்பார்
தொத்தல் பிறந்த சுடுகாட்டுச் சீதனத்தால்
நானென்னவாழ்ந்தேனிந் நக்கலின்துர்க்குணத்தால்
தானென்குடித்தனமும் தாதுகெட்டு நிற்கிறது
குடித்தனப் பாங்கறிந்தால் கூறாக் குறைவருமோ?
வடித்தவென்சொற்கேட்டால் வாழ்வுக்கு
மானியுண்டோ?

என்னலுமேகாந்தாரி யேற்றபடியுரைப்பாள்
பன்னிநீர் சும்மாய்ப் பலுக்கீறீர் தாறுமாறாய்
அசடானாலென்ன பெண்டாளாரோ பூமியிலே
பிசகென்ன வந்ததிப்போ பேயீர் நீர்தேடியதை
ஆர்க்குக் கொடுத்தே யனியாயஞ் செய்துவிட்டாள்
பார்க்கும் வகையறிந்த பர்த்தா நீரல்லவோதான்.

இவ்வார்த்தைகேட்டவரும் மிங்கேவா அம்மணிநீ
ஒவ்வாத முண்டமிவள் உள்வயணம் நீயறியாய்
கழுநீ ரிறுக்குமிடம் கண்ணுற்றுப் பார்ப்பாயேல்
விழுவாட்கு வாய்க்கரிசி வேண்டியது சிந்திநிற்கும்
கொல்லையிலே குவியுங் குப்பைதனைப் பார்ப்பாயேல்
நல்ல விளைச்சலின்ன நான்குநாள் தானிருந்தால்
கடுகு பதக்காகும் கண்டுமுதல் வெந்தயந்தான்
முடுகியாம் முக்குறுணி முக்கலமாஞ் செந்துவரை
இம்மட்டுடன்போச்சோ வின்னங்கேளென்னுரையைப்
பம்மியவள் நடத்தும் பம்பரைக் காரியத்தை
முத்தது தோற்கு முளகுசம்பா நல்லரிசி
புத்த மணக்கும் புனுகுசம்பா பச்சரிசி
கண்ணுக்கு ளோட்டுங் கடுகுசம்பா சிற்றரிசி

மண்ணிய கெம்பின் மலைநாட்டுச் செந்துவரை
நீல மணிபோல நின்றொளிரு நல்லுளுந்து
கோலப் பசுமைக் குணமா மணிப்பயறு
கொவ்வைக் கனிபோல் குவியும் மிளகாயும்
செவ்வையாய்க்கொட்டைவாங்கிச் சேர்த்தபிளியடையும்
என்னம்மாவென்னசொல்வேன் ஏழைநான்தேடிவைக்கத்
தன்னை யறியாமல் தானழித்துப் பாழு செய்வாள்.

பேமால மென்று பிடுங்குணிப் பட்டிமக்கள்
தாமாக வந்து சரச வுரையாடி
அரிசிகடன்கொடுப்பாய் அம்மணி நான்றருவேன்
பருப்புக்கடன்கொடுப்பாய்ப் பாங்காகநான்றருவேன்
இந்த விதமா விரக்கவரும் வம்பிகட்குப்
பந்தமுடன்கொடுத்துப் பண்டங்களுள்ளவெல்லாம்
ஆழும்பாழாக்கியழித்தாள்குடித்தனத்தை
தாழும்படியானேன் தையலேயென்னசெய்வேன்.

சொல்லதற்கு நேராகச் சொல்லுவளாங் காந்தாரி
நல்லநல்ல பேச்சுரைத்தீர் நாட்டிலிளைத்தவர்கள்
கடன்வாங்கிப் போகாரோ காலத்தில் முட்டினவர்
கடன்கொடுக்க மாட்டாரோ கட்டா யிருப்பவர்கள்
உபகாரஞ் செய்யும் உடம்பல்லோ நல்லுடம்பு
உபகாரஞ் செய்யா வுடம்பைச் சுடவேண்டும்
தான்வாழப் போதுமென்னுந் தாழ்ந்த குணமுடையான்
ஏன்வாழ வேண்டு மிரும்புவியி லென்றுரைத்தாள்.

வார்த்தை யதுகேட்டு வளமா யவருரைப்பார்
பார்த்ததிலை நீயுமிந்தப் பாவி குடித்தனத்தை
படியாலளந்துகொள்வார் பாதியால்தாங்கொடுப்பார்
இடியாவரிசிக்கிடிந்தநொய் கொண்டளிப்பார்
நல்லதைத்தாங்கள்கொண்டு பொல்லாதுதந்திடுவார்
சில்லறை தன்னைத் தெரியா திவளிருப்பாள்
கையார வாங்கினபேர் கம்மென்று தாமிருப்பார்

தையல் தலையில் சடகோபந் தாங்கவிப்பார்,
இத்தனை நற்சமர்த்தி யென்னம்மா வீங்கிவளும்
தத்துவஞ்சொன்னேன் தலைவிதியென்னசெய்வேன
எல்லா ரிழியுந்துறை யேற்றமுள்ளநல்லதுறை
பொல்லாத நான்பாவி பூந்ததுறைநீச்சாமே!
அந்தவுரை கேட்ட ஆகா வழியெழுந்து
பந்த முறைக்குமிவர் பாங்கதனை நீகேளாய்
அறுந்த விரலாற்றவங்கைச் சுண்ணாம்புகொடார்
பிறந்த சகோதரரைப் பிண்டத்துக் கின்றிவிட்டார்
பேராசை கொண்டு பெரும்வட்டிக் கிச்சைப்பட்டு
நேரும் பணங்களெல்லா நிர்மூல மாக்கிவிட்டார்
கடன்கொண்டபேர்களெல்லாங் கையைவிரித்துவிட்டார்
மடையர்நினைவுகெட்டு வைகிறார்என்னையிப்போ
உண்ட பின் வீட்டில் ஒருவ னிருப்பானோ
பெண்டுகள் கீழே பிரிமணையாவானோ
பானைகள் நோண்டிப் பரிக்ஷைகள் செய்வானோ
நானல்லால் வேறொருத்தி நாடி யிருப்பாளோ?

இவ்வண்ண மாக விருவழியும் வாதிழைக்க
அவ்வண்ணப் பெண்ணும் அருகில் நகைத்திருக்க
கலுழ்ந்து பகர்மொழியைக் காந்தாரி கேட்டுரைப்பாள்
எலிபூனை போல விருக்கிறீர் நீங்களிப்போ
உள்ள படியாகு முங்கள் விதிவசந்தான்
மெள்ளவே காலம் விளங்கக் கழியுமென்றாள்.

அப்போ தவர்களுக்கு மான சினேகிதராம்
தொப்பை முதலியென்பார் தோராத பேச்சுடையார்
பெண்ணைக் கொடுப்பதற்குப் பேசி முடிவுசெய்தார்.

கண்ணிய மாகவந்தக் காந்தாரி தானடந்து
அவதானி தன்னுடனே யாங்கு நடந்தவெல்லாம்
விவரமாய்ச் சொல்லியவள் மெல்ல நகைத்திருந்தாள்.

அச்சொல்லைக் கேட்டே அவதானி நெஞ்சழிந்து
கொச்சை மனிதரிந்தக் கூட்டத்தி லுள்ளவர்கள்
மானங் கிடையா மரியாதை யேதுமில்லை
ஈன வழக்கிடுவார் ஏசாத வேச்சுரைப்பார்
பிடிவாதங் கொண்டவொரு பேய்மகளைக் கட்டினக்கால்
தடுமாற்றங் கொண்டல்லவோ சாமளவு நிற்கவேண்டும்
தகப்ப னொருபேயன் தாயுமொரு பேமாலம்
சுகத்திற் குரியபெண்ணோ சொல்லும் பலாமுருடு.

பசிக்குப் பனம்பழத்தைப் பாராமற் றின்றிடப்பின்
மசக்கித் தலைசுழற்றும் வன்பித்தம் வாங்குமோதான்
மனதிற் கிசைந்தவொரு மங்கையவள் கிட்டினக்கால்
கனிவா யிருந்தெனது காலத்தைப் பின்னிடுவேன்
வீணான கல்யாணம் வேண்டாமேன னம்மணிநீ
கோண வழிலென்னைக் கூட்டாதே யிப்பொழுது
கைப் பணமில்லை கடனும் பெயராது
ஒப்பித மாகவொரு லாபந் தோன்றவில்லை
மனது கனியவில்லை மாதாநீ செய்யுமணம்
இனிதாகத் தோன்றவில்லை யென்றார் அவதானி.

உரைத்த வுரைகேட்டே யுண்ணொந்து காந்தாரி
சிரித்து வெடிப்புடனே சீக்கொட்டி வார்த்தை
சொல்வாள்.

தாய்வார்த்தை கேளாத நாயின்வாய்ச் சீரைநீயும்
பேய்ஞானம் பேசுகிறாய் பித்துப் பிடித்ததோடா
சாதியிற் கொள்ளாமல் சந்ததி நீளாமல்
பேதைப் படுவாய் பிழைத்தென்ன லாபமோடா
நீசக் குலந்தனிலே நெஞ்சிற் கமைந்தவளாய்
ஆசைக் கண்ணாட்டிவந்தால்ஆய்ந்து
மணப்பையோடா

பரங்கி வழக்கமது பார்த்துப் பரிக்ஷையிட்டுத்
தரங் கண்டுகொள்ளுந் தறிதலை நீயோடா
பட்டுப் பதைத்து பரிந்து வளர்த்தேனே
கெட்டுப் படுவாயோ கீழான புத்தியினால்
தாயென்று பாராயோ தத்திக் குதிப்பாயோ
வாயிற் படிப்பறிந்த வண்மையோ வீங்கிதென்றாள்.

அம்மை மனநோக ஆற்றா ரவதானி
செம்மை மொழிகேட்குந் தேற்றமிலை
யன்னையர்க்கும்.

இதுவென்ன கர்மமென்றே யேங்கி மனம்புழுங்கி
மெதுவாக வம்மையுளம் வேக்காடு தானடங்கப்
பயந்து சிலவார்த்தை பார்த்தவர் தாமுரைப்பார்
நயந்து செவிகொடென்று நன்றாகச் சொல்லிடுவார்.

பின்வருந் தீமையெண்ணி முன்பாக நன்குரைத்தால்
என்மேலே கோபமுற வேற்குமோ யுன்றனுக்கு
மெள்ள நினையாமல் மேல்வரவு நோக்காமல்
உள்ள நாள்தோறும் உறுப்பில் மடிந்தழியச்
சங்கட மென்றே தழுதழுத்துத் தானுரைத்தார்.

மங்கையது கேட்டு மறுகாம லேதுரைப்பாள்
சங்கட மொன்றுமில்லை சற்குலம் நல்லகுடி
வாயறுத லானாலும் வண்மை குறையாது
தாயுரை கேளாய்நீ தப்பித மொன்றுமில்லை
என்றே யவளுரைத்தங் கேற்றமுள்ள மாணாக்கர்
அன்றுவர வொண்ணிதியம் ஆங்கவரைச்
சேர்க்கவென்றாள்.

சொன்ன வுடனவர்கள் தூய மனதுடனே
முந்நூறு ரூபாயு முன்வைத்துத் தண்டனிட்டார்.

ஒபுலு செட்டியிடம் ஒதுகட னூறாகச்
சாபுலு சேனிடத்துத் தண்டியதீ ரைம்பதுடன்
கையிற் பணஞ்சமையக் கல்யாணக் காரியங்கள்
மெய்யாகச் செய்துவந்தாள் மேன்மையுள்ள காந்தாரி
தொப்பை முதலிகையில் சொல்லுந் தொகை
கொடுத்தாள்
ஒப்பி யவருமங்கே ஓங்கு களிப்புடனே
போகா வழிகையிலே போட்டா ரொருநூறு
ஆகா வழிதனக் கீரைம்பது தான்கொடுத்தார்.

ஆங்கவ ளப்பணத்தை யவர்வச மாகவைத்தாள்.
தாங்கு நகைக்கே தனியிரு நூறுவைத்தார்
மற்றொரு நூற்றால் வருஞ்செலவு தானடத்தச்
சித்த மதாகித் தெரிந்தவர் தாமிருந்தார்.
ஈறல் மனத்தார் இருவழியு மேலுரைப்பார்
கூறை விளையாடல் கோமளப் பட்டிலிப்போ
தாரு மிலையேல் தரமாட்டோம்
பெண்ணையென்றார்.

பாரம் பொறுத்தாள் பதமறியாக் காந்தாரி
முதலியா ருள்ளிருந்து மூக்குக் கொடுத்துவந்தார்
பதமாய் நகைக்குவைத்த பத்திலறுவு செய்தார்.
முதலியார் சத்திரத்தில் மூர்த்தம் நடக்கவென்றே
இதமாகச் சொல்லவிரு வழியுஞ் சம்மதித்தார்.

நாளிட்டு மூர்த்தம்வைத்தார் நல்ல புரோகிதர்கள்
காளையவ தானி கல்யாணங் காணுதற்கு
மாட்சிமை யுள்ளவொரு மானாவதி யும்வந்தாள்
கோட்சொலிக் குண்டுணியுங் கொள்ளியழி
கண்டனுடன்

வீரப் பிடாரிவந்தாள் வெட்டுணி தங்கைவந்தாள்
போரிட்டு வம்பிழைக்கும் பொல்லாவெங்
கண்ணன்வந்தான்.

போகா வழியின்றம்பி பொல்லாப் புளுகுணியும்
ஆகா வழியின்றம்பி யாங்காரப் பட்டன்வந்தான்.
ஆங்கவரைச் சேர்ந்தோ ரடங்கலும் வந்தார்கள்.
தீங்குவிளைக் கத்தெரிந்த மகான்கள் வந்தார்
அழிகண்ட சூண்டுணிகள் ஆங்காரப் பட்டரின்னம்
விழுவா ளுணியின்தங்கை வீரப் பிடாரியுமாய்
ஓசனை செய்தார் ஒருமிக்கத் தாங்கூடி
நேசமேற் பாராட்டி நின்றுசதி விளைத்தார்.

அழுக்கா றடைந்தெ யகங்கார மேல்முதிரப்
புழுக்கைப் பயல்தனக்குப் பெண்ணெரன்றோ
வென் றெழுந்து
பெண்ணுக்குத் தாய்மனதைப் பித்தனென்பா
ரோர்புறத்தில்
புளுகுணி ஐயோ பொருத்தமிலை யென்றுரைப்பார்
அழிகண்டன் பிள்ளைதனக் கண்டம் பெருத்த
தென்பார்
குண்டுணி யீங்கிவற்குக் கோடி வியாதியென்பார்
சண்டாளர் செய்யாத தாழ்தொழில் செய்வ
னென்பார்
வீரப்பிடாரி யிப்பெண் மெல்லிய லல்லளென்பாள்
சேர்குறி களில்லை சிரிப்பாணிக் கோலமென்பாள்,

வெங்கண்ணர் மூக்கில் விரல்விட்டுத் தும்மி நிற்பார்
அங்கவர் தம்பி படுத்துவிளக் கணைப்பார்
வெட்டுணி தங்கையிது கெட்ட சகுனமென்பாள்

கட்டா யிவ்வாறு கலகங்கள் தாம்விளைத்தார்
காந்தாரி யப்போ கதிகலங்கித் தானிருந்தாள்
தேர்ந்த மகனுரையைத் தேராமற் செய்ததற்கு
மக்கி மடிவாள் மனம்புழுங்கித் தானழுவாள்
வெட்கத்துக் காற்றாளாம் மெல்லிய ளென்னசெய்வாள்
அப்போ திளையா தவதானி யென்னசெய்தார்
தொப்பை முதலியுடன் சூழ்ந்து விரகறிந்தே
ஊரதிகாரி தன்னை யொய்யெனத் தானழைத்து
நேராவழிகள் தம்மை நேரிலே நிற்கவைக்க
அதிகாரி யப்போ தவர்முகம் பார்த்துரைப்பார்
சதிகாரர் செய்யுமொரு சர்ப்பனைக்குள் ளானீர்கள்
முன்னம் பணம்வாங்கி மோசம்பின் செய்வாரோ
சின்னத் தனமல்லோ சீக்கொட்டி யேசாரோ
மானி யவதானி மட்டில் விடுவாரோ
ஈனர் மொழிகேட்டே யேனோ கெடுவீர்கள்
கொடுத்த பணந்தனக்குக் கோட்டிலே போட்டிழுப்பார்
பிடித்த செலவுடனே பின்மான நஷ்டமுமாய்த்
தெண்ட மிறுத்துச் சிரிப்பாணி நீர்படுவீர்
மிண்ட ருரைகேட்டு வீணாய்க் கலங்காமல்
உங்கள் மனக்கருத்தை யோசித் துரையுமென்றார்.
எங்கள் கருத்தென்ன விந்த முகூர்த்தமதில்
பெண்ணைக் கொடுக்கத்தடை பேசவில்லை யென்றுரைத்
தார்.

நண்ணு மதிகாரி நல்லதென்று தானெழுந்து
துச்சராய் நின்று துடுக்குகள் செய்யுமந்த
கொச்சை மனிதர் தம்மைக் கொண்டுவந்தான் வெளியில்
காலிற் றொழுவடித்துக் கண்டவர் காறிமுய
காலைத் தெருவினிலே சட்டமாய் நிற்கவைப்பேன்
என்றே யவரும் இரைச்சலது போட்டு
தன்றாய்த் தலையாரிக்காவல் நாலெங்கு மிட்டார்.

பெட்டியிற் பாம்புகள்போல் துட்டர்கள் போயடங்கச்
சட்ட மாயுள்ள சடங்குகள் தாமியற்றி
அதிகாரி போட்ட அதிர்வேட்டில் தாம்பயந்த
சதிகார ருள்ளந் தைரியங் கொள்ளுமுன்னே
மும்முடி யும்போட்டு முழக்கினார் வாத்தியங்கள்
மும்முடி யும்போட முடிந்தது கல்யாணம்.
என்ன கலியாண மேது மனக்களிப்பு
என்ன கலியாண மெங்குங் கலசமிட
உற்றா ருளங்கசந்து போனார்கள் பெண்ணதனைப்
பெற்றார் இருவர் பிளந்துமனம் புண்ணானார்.
தப்பா முகூர்த்தமது தானடந்த பின்னணுகித்
தொப்பை முதலியவ தானியுடன் சொல்லுரைப்பார்
செலவுக்கு நீகொடுத்த சின்னத் தொகைநூறும்
குலவு நகைச்காய்க் கொடுத்த விருநூறும்
முந்நூறு ரூபாய் முழுதுஞ் செலவாச்சு
இன்ன மிருநூறு மேறுமெனத் தானுரைத்தார்.
மூக்கில் விரலைவைத்து மோகித் தவதானி
நாக்குளறித் தானும் நடுங்கி யுரைப்பாராம்
என்னண்ணே நீங்கள் இருந்தபண முந்நூறும்
பின்னென்ன மில்லாமற் பேய்ச்செலவு பண்ண
லாமோ
எளியவ னானாச்சே வென்னதைச் செய்வதினி
விளையும் பொருளிலையே மேற்செலவுக் கென்று
ரைத்தார்.
பதறாதே தம்பி பரிவாக நானுனக்கும்
உதவினே னல்லாமல் ஓர்தீங்கு செய்யவில்லை
உன்பருவுக் கேற்றபடி யோர்ந்து செலவுசெய்தேன்
என்மீ தலுக்காதே விந்தா கணக்குமென்று
திருமணப் பந்தலிலே சிங்கார மாயிருந்து
மருவும் சனங்களுழை மத்தியில் தானிருந்து
ஊங்காரஞ் செய்தே உரத்த தொனியுடனே
பாங்காம் முதலியாரும் பட்டோலை தாம்படித்தார்.

## குறவஞ்சி

தென்தினனாத் தினதினனாத் தினதினனாத்
தினனாத், தினத் தினதினனாதினனா, தென்
னானத் தினதினனாத் தினதினனா த்தினனா.

அவதானி கலியாணச் செல்வதனைக் கேளீர் - நீங்கள்
செலவதனைக் கேளீர்
அழகாக விவரஞ்சொல்லி யறைகுவன் நீர்கேளீர்
கோலவிளை யாடல்விலை கொண்ட திருபத்து, ரூபாய் -
கொண்ட திருபத்து 20

கூறைப் பட்டுவாங்க மூன்றுபத்து விலைகொடுத்தோம்-30

ஆனதாரை வார்த்தவர்க்கே யழகு வேட்டிபுடவை, நல்ல
அழகு வேட்டிபுடவை
அவைவாங்கப் பிடித்ததொகை யையைந்து மைந்து- 30
பாக்கிரண்டு மணங்குக்காகப் பழுத்த தறுநான்கு, ரூபாய்
பழுத்தறுநான்கு 24

பண்பான குளிமஞ்சள் மணங்கு பத்துரூபாய் 10

வெற்றிலைக்குக் குத்தகையாய் விட்ட தெட்டு ரூபாய்,
அய்ய, விட்ட தெட்டு ரூபாய் 8

வேண்டிய நன்மாலைபுட்ப முதவப் பத்துவெள்ளை - 10

பந்தலுக்குக் குத்தகைதான் பதினைந்து ரூபாய், அய்ய
பதினைந்து ரூபாய்-15

பாங்கான காவற்கார ரிருவருக் கும்பத்து 10
பழமிலை காயுதவுதற்குத் தோட்டக்கா ரன்பற்று, அய்ய,
தோட்டக்காரன்பற்று

பதினைந்து தேங்காய்க்குப் பதினெட்டுரூபாய்-33
ஆனகறி யமுதுவகை யடுப்புக் கெரிதுரும்பு, அய்ய
அடுப்புக்கெரிதுரும்பு

ஆவின்பால் தயிர்நெய்கள் ஐந்து பத்துரூபாய்-50
மேளங்கள் நாகசுர நாலுநாளும் முழங்க, அய்ய, நாலு
நாளுமுழங்க

மிதமாகக் கொடுத்ததொகை விரிக்கப் பத்துரூபாய் 10

பச்சரிசி பருப்புளுந்து பயறுகாரா மணியும், நல்ல பயறு
காராமணியும்

பரிவாகக் கொண்டதொகை பயிற்றைந்துமெட்டும் 58
நல்லவெல்லம் சர்க்கரைக்கும் நான்மூன்று ரூபாய், அய்ய
நான்மூன்று ரூபாய் 12

நல்லெண்ணெய் நான்குரூபாய் விளக்கெண்ணெ யெட்டு
12

கோதுமைமா ரவைதமக்குக் கொடுத்த தைந்துரூபாய்,
அய்ய, கொடுத்ததைந்துரூபாய் 5

குணமா முந்திரிப்பருப்பு கொண்டதொரு மூன்று. 3

கடைச்சரக்கு மிளகுமுதல் கணக்குப் பத்துரூபாய், அய்ய,
கணக்குப் பத்துரூபாய் 10

கலியாண தக்ஷணைக்குப் பிடித்த தைந்துபத்து 50
கணக்கி லகப்பட்டதொகை காட்டினன் நானூறு-அய்ய,
காட்டினன்நானூறு

காணாத தொகைகளின்னங் கையைவிட்டுக் கொடுத்தேன்.
குறம்பாடி யிந்தவண்ணம் கொடுத்தவொரு கணக்கை,
யவர் கொடுத்தவொரு ருகணக்கை

அறம்பாடா தவதானியனு மதித்தா ராங்கே.
தெனதினனா &c.

நற்றோழர் ஆகையினால் நானிப் பணிபொறுத்தேன்
மற்ற தொருநூறு மண்டிக்குப் பாக்கியென்றார்,
ஏற்ற செலவுதனக் கென்செய்வோ மென்றிரங்கி
நூற்றுக்கு நான்குவட்டி நோட்டெழுதித் தான்கொடுத்து
இதுவும் விதியென் றிருநூறு கைக்கடனாய்
சதிரிலாக் கல்யாணஞ் சாயவைத்தா ராங்கவரும்.

காந்தாரி யம்மையவள் கண்குளிரக் கண்டிருந்தாள்
தான்தந்த தீங்கதனை நினையாமல் தாயிருந்தாள்
நாகவல்லி நாளில் நடந்ததொரு காரியத்தில்
சோகமுற வேது தொடர்ந்தவ தானியர்க்கும்
அடைகாய்ச் சுருளை யகவாயிற் கொள்ளுகையில்
மடக்கியே கண்கிட்ட வைத்தது தானறிந்து
கலியாணப் பெண்ணுங் கருதி யுரைக்கலுற்றாள்
வயிற்றெரிச் சற்பெண்ணுக்கு மாலைக் கண்ணமுடையான்
பயித்தியக் காரர் பரிந்தென்னைப் பெற்றவர்கள்
அவ்வரை கேட்டே யவதானி நெஞ்சழிந்து
இவ்விதக் கென்ன செய்வோம் ஈசாவெனக் கலுழ்ந்து
சின்னஞ் சிறுமியிவள் சிற்றாடை கட்டறியாள்
எண்ணி யொருவார்த்தை யுரைத்தாள் புதுமையென்றே
உள்ள முருகி யொருவரொடுஞ் சொல்லாமல்
மெள்ளச் சலித்தே வினையாளர் தாமிருந்தார்.

சம்மந்தி மாரைத் தமதிருக்கை மேவியபின்
அன்பா யழைத்தே யழகு விருந்துசெய்யப்
போகா வழிதமையன் பொய்யறியாப் புண்ணியவான்
வாகு தெரியாத வன்கோபந் தாமுடையான்
ஆங்கவரைத் தூபமிட்டே யஞ்சாத நெஞ்சுடைய
வீங்கலாங் குண்டுணியும் வெங்கண்ண ராங்கவர்தம்

தங்கை படுநீலி சண்டிப் பிடாரியவள்
காந்த னழிகண்டனொடு கட்டிக் கலகஞ்செய்தார்.

மஞ்சள் நீரோடுவாழைச் சாறுவிளக் கெண்ணெய்கூட்டி
மிஞ்ச வேயந்த வெகுளிப் பிராமணன்மேல்
தான்தோன்றி கைகொடுத்துத் தான்பொழிய விட்டார்கள்
தான்தரித்த நற்றுகிலும் தன்னுடம்புந் தான்கெடவே
ஆங்காரத் தோடவரும் அம்மகனைத் தானறைந்தார்.

ஊங்காரத் தோடிதனை யுண்டுபண்ணச் சண்டாளர்
கையொடு கைமோதிக் கடகடெனப் பற்கடித்தே
ஐயோ நீ பாவி யடிப்பாயோ பாலகனை
கண்ணைப் பிடுங்கிடுவோம் கையை யொடித்திடுவோம்
மென்னை யுறந்திடுவோம் விட்டோமோ வுன்னையென்று
புலுபுலென வவரைப் புல்லர்கள் போய்வளைந்து
கலக மிழைத்தார் கறுத்து முகஞ்சுளித்தே
அடபயலே நீதான் அடிப்பாயோ பாலகனை
எடுசோடு பாப்பாச்சிங் கென்றானே குண்டுணியும்
மட்டிப் பயலேயுனை மண்வெட்டி கொண்டிரண்டாய்
வெட்டிப் புதைப்பேனென்று வெகுண்டாரே
வெங்கண்ணர்
கிட்டித் துனக்குமிப்போ கேடென் றுரெத்தமுந்து
அட்டா துட்டங்கள்பேசி யார்த்தழி கண்டனின்றான்
வெட்டுணி தங்கையோடு வீரப் பிடாரியுமாய்
கட்டையில் வைக்கவுன்றன் கண்ணைக் கழுபிடுங்க
பாம்பு பிடுங்கியுன்றன் பல்லுக் கருகவென்றார்.

தீம்பர்க ளிவ்விதமாய்ச் சேர்ந்து படைகள் செய்யப்
போகாவழி தமையன் புத்திகலங்கி யொன்றும்
ஆகாமற் றானடுங்கி யவரவர்க்குத் தாழ்ந்துரைப்பார்.

தெரியாமல் நானடித்தேன் செய்தபிழை நீர்பொறுப்பீர்
வருகாத கோபம்வர மைந்தனை நானடித்தேன்.

கெஞ்சி யிரந்தாலும் கேளாராம் வஞ்சமக்கள்
நெஞ்சிற் கறுவால் நெடுஞ்சண்டை தாம்விளைத்தார்.

கதையென்று காந்தாரி கட்டுரை தானுரைப்பாள்
விதியோ விதுநீங்கள் வேண்டுமெனச் செய்தவினை.
சும்மா யிருப்பவன்மேல் சூதுகள்ளப் பாவிகள்நீர்
திம்மாக்குக் கொண்டு சிறுவனை யேவிவிட்டு
முன்கோபி யென்றறிந்தும் மூர்க்கம் விளைக்கவவன்
தன்மேலே கெட்ட சகதிநீர் கொட்டவைத்து
பின்பு மகனைப் பிடித்தறையப் பார்த்திருந்து
சண்டை விளைத்தீர் சதிகாரப் பாவிகளே
மண்டை யுளநாளும் வன்பகை விட்டதில்லை
காந்தாரி சொற்கேட்டுக் கண்சிவந்து மெய்வியர்த்து
தாந்தம் வெறுவாய்கள் தந்ததெலாந் தாங்
கொழித்தார்.

பிள்ளைக்குக் கல்யாணமான பெருமையடி
சள்ளுப் புள்ளென்று தலைதுள்ளிப் பேசுகிறாய்
வெட்டுணி யுன்மகனை மெல்ல வளவாக்கால்
பொட்டைப் பயலுக்கிந்தப் பொங்கு விளையுமோ
தான்!

வெட்டுணி யூரிவில்லா வேளையிலே மோசஞ்
செய்தாய்
கிட்ட வவனிருந்தால் கிளெங்குங் கண்ணாலம்.

செக்குலக் கைபோலச் சிரமசையா துன்மகன்றான்
பக்கத் தடியுண்ட பாலகனைப் பார்த்திருந்தான்
கொடுங்கண்ணி நீயுமனம் கூசாமற் பார்த்திருந்தாய்
அடமாடித் தான்விடுவான் அந்தவெட் டுணி
கண்டால்
மணமென்று வந்தக்கால் மஞ்சள்நீர் ஊற்றாரோ
பிணம் பட்டவீடோடி பேசாமற் போவதற்குப்

பன்னி யிவ்வண்ணம் பழிகாரர் தமுரைக்க
மன்னிய சம்பந்தி வர்க்கத்தார் போய்மறைந்தார்.

கண்ட அவதானி காய்ந்தங்கே யேதுரைப்பார்
பண்டுங் களைநானும் பாக்கிட் டழைத்தேனோ
வதுவைத் தடுக்கவந்தீர் மற்றது வாய்க்கவில்லை
சதிக ளிழைத்துவிட்டுத் தனிப்போக வெண்ணினீர்கள்
எண்ணம் பலித்ததிப்போ தேகுமின் வீடுவிட்டுப்
பண்ணும் பழந்தீமை பாதகரே நானறிவேன்
ஊர்கூட்டி வைப்பேன் உங்கள் பவிஷெடுப்பேன்
ஆரென்று பார்த்தீர் அவதானி யென்றறிவீர்.

சொன்ன வுடனிருந்த சோடின்றிப் போனார்கள்.
பின்னை யவதானி பீடழிந்து வாடிமனம்
அலைச்சல் திரிச்சலினால் அங்க மெலிவடைந்து
பரிந்து மருந்துவகை பண்ணும் வரிசையினால்
ரசகந்த பாஷாண நச்சுப் புகையேறி
நாடி தளர்ந்து நரம்பின் பலமொடுங்கி
ஓடி யுழைக்க வுள்ளபலன் றானொடுங்கி
கடன்காரர் சள்ளையினால் கண்ணியந் தான் குறைந்து
திடங் கெட்டுப்போனதினால் சிந்தை மறுக்கத்தினால்
ஒற்றைத் தலைநோயும் ஓயாத வெஞ்சுரமும்
பித்த மயக்கும் பெரு ரத்த பேதியுடன்
பக்கப் பெருஞ்சூலைப் பாரிச வாயுவுமாய்
மிக்க வருந்தி மெலிந்தா ரவதானி
இனியே தெனவிரங்கி யெல்லோரு முள்ளுடைந்தார்
சனிபோற் கடன்காரர் சந்தியிலே தாமிழுத்தார்
எரியின் மெழுகாகி யேங்கி யவதானி
பரிகின்ற தாய்முகத்தைப் பார்த்தவ ரேதுரைப்பார்
வீணான கல்யாணம் வேண்டாமென வுரைத்தேன்

கோணல் வழக்குரைத்துக் கூட்டிவைத்தாய் நீயதனை
கொள்ளக் கிடைக்காக் குணமுள்ள பெண்
கொணர்ந்தாய்
மெள்ள வதுநடக்க விக்கினங்கள் நூறாச்சு
பாழுக் கிறைத்துப் பணமெல்லாம் பாழாச்சு
ஏனழக் குடித்தனந்தான் எப்படி மேலெழும்பும்
படுத்து விழுந்துநானும் பாயொடு பாயானேனே
எடுத்துக் கைதூக்கிவிட யீங்கொருவ ரில்லையே
முன்பு படித்தோர் முறைவைத்துச் சோறளித்துத்
தென்புகள் தப்பித் திகைத்திருக்கும் வேளையிலே
கடன்காரர் சல்லியத்தைக் கண்டக்கா லேதுரைப்பார்
கடனில்லாக் கஞ்சியது காற்கஞ்சி யானாலும்
உடம்பிலே யொட்டுமம்மா உன்புத்தி கேட்டடியேன்
மடமை மதியாலே வாங்கினேன் வீங்குகடன்
நூற்றுக்கு நாலாக நொள்ளைவட்டி யிட்டழிந்து
சோற்று வரும்படியைத் துட்டருக்குத் தானமுதும்
ஐய ரிறந்தக்கால் ஆசைமுதல் மோசமென்று
மெய்யாகக் கோட்டில் விதிவழக்குத் தாந்தொடுத்தார்.

சிறையிலே யம்மாவென் சீவனொழிக்க வேண்டும்
அறிவில்லாப் பேய்மதியா லானதிது வென்றழுதார்.

அம்மையது கேட்டே யாவென்று தானமுதாள்
விம்மி வெறுத்து விதியை நினைந்தழுதாள்.

அவதானி தம்முடைய வந்தரங்கத் துள்ளொருவர்
இவர்படும் பாடதனை யெண்ணியே சிந்தையிட்டுப்
புண்ணிய வானுக்கிந்தப் புன்மை வரலாகாது
நண்ணுநம் நண்பர் நலங்குலை தல்கூடாது
மானத்தா லன்பர் மனமறுகப் போகாது
நானிருந்து நண்பர் நலிந்து குழைவாரோ
பாரிலே நாமும் பழமையாந் தோழரன்றோ

சீராம வருயிரிற் செல்வஞ் சிறந்ததுண்டோ
என்றே நினைந்துருகி யேன்றகடன் காரருக்கு
நின்ற தொகைகொடுத்து நேயருக்குஞ் சொல்லாமல்
அவதானி தேறுதற்கு மான வுதவிசெய்தார்
தவறாக் கொடைசொரியுந் தர்மமிட்ட ரென்பவரும்.

வில்லங் கந்தீர்ந்த விதங்க ளறியாமல்
நல்லதோ ரன்பர் நயங்கள் தெரியாமல்
கடன்காரர் வாராமற் கண்மறைந்து போனதற்கு
படுபாவ மஞ்சாத பாதகர் போனதற்கு
வியந்து மனதில்தரு மிட்டர் முகம்பார்த்து
நயமுள்ள தோழாவே நாடிக் கழுத்தறுக்கும்
கடன்காரப் பாவிகளென் கண்முன்னே காணோமே
தொடர்ந்தே யவரிழைக்குந் தொல்லையொன்றுங்
காணோமே
என்று கதைக்கலுமே யேற்ற வுயிர்த்தோழர்
கன்றிக் கலுழேல் கடன்காரர்க் கென்றுரைத்துக்
காட்டி யெதிரில்வைத்தார் காதறுத்த நன்முறியைக்
கூட்டியே கட்டிமடி கொண்டங் கவதானி
நன்றி யுரைப்பதற்கு நாவழிந்து வாய்குழறி
நின்ற நிலைதனிலே நெட்டுயிர்ப்புத் தானெறிந்த
உண்டோ வுலகி லுனக்குத் துணையுமப்பா!

கண்டது கொண்டோடுங் காலத்தி லிந்நினைவு
இப்போதோ பின்னையோ வென்றிருக்கு மென்றனுக்காய்
ஒப்பிக் கடன்தீர்த்தே யுபகாரம் பண்ணினையே
என்னுடைய புத்தகங்கள் ஏற்குமற்ற நற்பொருள்கள்
உன்னுடைய வீடதனில் ஒப்புடனே கொண்டுசெல்வாய்
இதிலே யெழுந்திருந்தால் ஏற்றவையை மீட்டிடுவேன்
இதிலே யிறந்தாலோ வீறலின்றிப் பார்விடுவேன்
என்றவர் கூறியுள்ள யாவு மனுப்பிவிட்டார்
கன்றிய தோழர் கருத்தை மறுத்தவரும்.

ஈச னருளாலும் ஏற்ற மருந்தாலும்
நேசர் துணையாலும் நெஞ்சிற் களிப்பாலும்
ஈராண்டில் நோய்தீர்ந் தெழுந்தா ரவதானி
நேராய்த் தெளிந்தவரு நேர்ந்த முயற்சியினால்
சம்பா தனைகள்செய்து தாயார் வழியாக
முன்புள் ருணங்கள் முதல்வட்டி யோடிறுத்தார்.

சாக விரும்பிநின்ற தாயாதிக் கூட்டமெல்லாம்
யோகம் பழுத்தகண்டு மொட்டிக் கெடுக்கவந்தார்.

தாயாதிப் போன்றிச் சந்துகண்டு வாய்திறந்தே
ஓயாத பந்தூக்கள் ஓரொருவராக வந்தார்
முந்தை யுறவுடனே முன்னுறவு பின்னுறவு
சந்தையில் நாய்களெனத் தாட்டிக மாகவந்தார்
புக்காத் துறவு புறந்தாத்துப் பேருறவு
அக்கா ளுறவுடனே யத்திம்பேர் நல்லுறவு
பாட்ட னுறவுடனே பாட்டிதன் மேலுறவு
காதுவைத்து மூக்குவைத்துக் கட்டுரைத்துச் சொல்லுறவு
பேதம் பாராட்டாத பேயர் தருமுறவு
வந்த வுறவினர்க்கும் வண்மையுப சாரஞ்செய்து
சிந்தை மகிழ்ந்துதாயும் சீர்செலுத்தி வாழ்ந்திருந்தாள்.

சற்றுமுன் பிள்ளைபட்ட சங்கடங்கள் தானினையாள்
உற்றமருகி தன்னால் ஒடித்தனிட்ட மென்பாள்
அவதானி தானுமந்த வம்மைவழி போகாராம்
தவஞ்செய்து பெற்றெடுத்த தாயுரையை மீறாராம்.

காந்தாரி கண்டவொரு கண்ணா மருகிதன்னை
வேந்தர் மகள்போல மேன்மையாய்த் தான்வளர்த்தாள்
கொசராக வந்த குமரனையுந் தான்வளர்த்தாள்
அசலா யவன்தனக்கு மானகலை யோதிவைத்தாள்
வாய்த்த மகிழ்வால் மதிமயங்கி மெய்மறந்தாள்

பேய்த்தன மாகப் பிலாமுரட்டைத் தான்மருவி
போன வழியெல்லாம் போகவிடங் கொடுத்துப்
போன வழியெல்லாம் போகவிட்டுத் தான்மகிழ்ந்து
எனக்கோ ரதிகார மேதுமில்லை கண்மணியே
உனக்கே யதுவெல்லாம் உன்வேலை நான்பொறுப்பேன்
ஆம்பான் கொணர்ந்தவெல்லாம் அங்கையில் வாங்கிடுநீ
ஆம்பா! நகையிடென்றே யஞ்சாமல் நீகேளு
தேட்டத்தைக் கைமேலே சிந்தாமல் நீகொடுத்துப்
போட்டத்தைத் தின்று புழுக்கைபோல் நீகிடவாய்
எசமானி நானலவோ வேற்ற குடித்தனத்தில்
நிசமாக நானும் நிருவாகம் செய்துவைப்பேன்
சம்பா தனைகளெல்லாம் தந்துவிடா யென்றனிடம்

என்பாடு பின்கணக்கு மேதென்று கேளாதே
ஏதென்று கேட்டாயோ ஏறெடுத்து நான்பாரேன்
வாது நீசெய்தால் மனங்கனிந்து நான்பேசேன்
முத்த மிடவந்தால் முகங்கொடுக்க நான்மாட்டேன்
பத்தி செய்வையானால் பரிவாக நானடப்பேன்
இந்த விதமாக வீனமொழி வாய்தனிலே
வந்த படிக்கே வழங்கியந்தக் காந்தாரி
மருமகளுக் கோதியவள்வைத்தாள் மதிகேடி
அருமை மகனுரையை யாங்கவள் கேளாளாம்.

அறிவில் முரட்டுக்க கந்தையிது வோதிவைத்தால்
குறி கெட்டுப்போகுங் கூறுங் கலையுரைத்தால்
பின்னுக்கு நன்மையென்று பேசினா ராங்கவரும்.

என்னக் குலுங்கநகைத் தேதுரைப்பாள் நற்றாயும்
பேய்ப்படு வாய்நீயினியுன் பெண்டாட்டி தான்படித்து
வாய்த்த பெரியவரை மட்டா மதியாமல்
பரங்கி கள்போலப் பரியவொரு வண்டியிலே
விரியும் நிலவில்நீங்கள் வேடிக்கை யாய்த்திரியக்

கருத்தோ வுனக்கென்று கைகொட்டித் தான்சிரித்துத்
தரித்திரப் புத்தியிதைத் தள்ளென்று தாயுரைத்தாள்.

உரைத்த மொழிகேட்டே யுண்ணெந் தவதானி
நரைத்த கிழங்களுக்கு ஞாயந் தெரியாது
நல்ல திட்டமில்லை நமக்கென்று நாவுலர்ந்தே
அம்மா வதுவேண்டாம் ஆகாதை யோதாதே
சும்மாய் வருமகந்தை சொல்லாதே யென்றுரைத்தான்.

சொல்லதனைக் கேட்டே சுறுக்கிட்டுக் காந்தாரி
நல்ல மருகிதனை நாடிப் பழிக்கலுற்றாய்
என்னம்மா வந்தாள் இளைத்தகுடி மேலாச்சு
பொன்னம்மா வந்தாள் புகழுனக்கு வாய்த்ததடா
குழந்தை யெனவந்தாள் கோணல்வழி தானடக்க
மொழிந்த சரசமதால் மோசமுண்டோ பேய்மகனே?
பேசலு மென்னவிதுபேய்க்கூத்து மாமணக்கும்
நீசெய்வ தம்மா நினைவழிந்து போகாதே
பெற்ற தாய்நெஞ்சம் புழுங்குமென நான்பயந்து
செத்த பிணம்போலச் செப்பினது கேட்டிருப்பேன்
முன்பே பலாமுருடு மூர்க்கம் முதிருமின்னம்
பின்பு தெரியுமிது பேமாலங் கொண்டவளே
சொல்லி யவதானி சூழ்வினையைத் தானினைந்து
நல்லக நமக்கு நாடுமோ வென்றிருந்தார்.
பலா முருடுமப்போ பதங்குலைந்து மாமிதன்னால்
தலைமீதி லேறவிடத் தாறுமாறாய் நடந்தாள்
செல்லங் கொடுக்கத் திறங்கெட்டுத் தானடந்தாள்
நல்லதும் பொல்லாதும் நாடி யறியாமல்
மாமியார் தன்னை மதியாமல் தானடந்தாள்
பூமி யதிர்ந்து பொடியெழத் தானடப்பாள்
திக்காரஞ் செய்து திருக்குடன் தானடப்பாள்
முக்காலு மானையிட்டு மூஞ்சி சுளித்துநிற்பாள்

மேட்டிமை யாய்வளர்ந்த மேலான மாமியர்க்குக்
காட்டினாள் கைமேல் கனிவுக் கடுத்தபலன்
கொழுனன் றனைமதியாள் கோவித்தாற்
கைகொடிப்பாள்
அழகுகள் காட்டிநிற்பாள் ஆதாளி தாணிடுவாள்
ஈங்கிவள் பேய்க்கூத்து மிப்படி தானிருக்கப்
பாங்கிலாச் சுற்றம் பரிந்தங்கே வந்தார்கள்
முகமறியாச் சுற்ற முனைந்தங்கே வந்தார்கள்
நகைமுகங் கொண்டவர்கள் நாடியே வந்தார்கள்
ஒப்பாரி சொல்லியங்கே யோரொருவர் வந்தார்கள்
தப்பாத் தலைதடவும் தாட்டிக மக்கள்வந்தாள்
தலைதடவிக் காசடிக்கும் தப்பிலிகள் வந்தார்கள்
குட்டிக் கலகஞ்செய்யுங் கோளர்கள் வந்தார்கள்
நெட்டை யொடிக்கவல்ல நீசர்கள் வந்தார்கள்
அவதானி யம்மையிடம் அண்டியவ ரேதுரைப்பார்
''புவனத்தில் உன்போல் பொறுத்தவர் இல்லையம்மா
தாயாதிக் காய்ச்சல் தகிக்காமல் விட்டதுன்னை
நீயா கையாலே நிலைத்தாயிப் பூமியிலே
உன்றன் புதல்வன் ஒருகோடி பொன்னுனக்கும்
ஒன்றுங் குறைவின்றி யுன்சொற்படி நடப்பான்''
மாமா லங்காட்டி வரிசை யுடன்பசப்பி
ஏமாற்றிக் காசவர்கள் எத்திப் பறித்திடுவார்
''வாய்த்தா னுனக்குமகன் வம்சம் தழைப்பதற்கு
வாய்த்தான் மகனுன் வயிறுசெய் பாக்கியத்தால்
சிந்தைப்படி நடக்குஞ் செல்வப் புதல்வனம்மா!
இந்தப் புவிதனிலே யீடுனக் காருமில்லை
நீபார்த்துச் செய்வதற்கு நின்மக னொன்றுரையான்
நீபார்த்துக் கண்ணிரங்கி நேருங் குறைதீர்ப்பாய்
பெண்ணுக்குக் கல்யாணம் பிள்ளைக் குபநயனம்
கண்ணுக்குக் கண்ணுனக்குக் காதற் புதல்வனுண்டு
போகும் வழிதனக்குப் புண்ணியத்தை நீதேடு
ஆகிற தர்மமன்றோ வான துணையுனக்கு!''

இப்படி யாகஅவர் ஏத்திப் பசப்பலுமே
துப்பிலாக் காந்தாரி சொல்லில் மகிழ்வாளாம்
தன்னைப் புகழத் தனங்கள் கொடுப்பாளாம்
இன்னந் துதிப்பவர்க்கும் ஏற்றநலஞ் செய்வாளாம்
கொண்டவர் மீண்டுமீண்டு கூசாமற் றாம்வருவார்
மீண்ட ரவர்க்கம்மை மீட்டுங் கொடுத்துநிற்பாள்.

அவதானி யீதறிந்தே யன்னையரைத் தானழைத்துத்
துவளாமல் மீண்டுவரும் துட்டருக் கிட்டழித்தால்
வண்மை கலைவருமோ வாகினிக ளாவோமோ
பெண்மைக் குணத்தாலே பேய்ச்செலவு பண்ணலாமோ?
என் றுரைக் கக்கேட்டே யிருகண் சிவந்தவளும்
நன் றுரைத்தாய் நீயுமிது நான்செய்யு நல்லறத்தால்
உன்குடியும் சீராம் உனக்கோர் குறையுமில்லை
என்வழிக்கு நல்ல வினிய துணையாகும்
போகும் வழிக்கும் பொருந்துந் துணையாகும்
சாகும் வழிக்குத் தலையாந் துணையாகும்.

தாயுரை யைக்கேட்டுத் தனிமகனுந் தான்சிரித்துப்
பேய்மனதைத் தான்திருப்பப் பின்னு முரைத்திடுவார்
(அம்ம!)—கைப்பாடு பட்டால் கடவுள் துணையிருப்பார்
மெய்ப்பா டுடையார்க்கு மேன்மையுண்டு மாநிலத்தில்
நாம்பட்ட பாட்டால் நலப்பட்டோம் பூமிதனில்
சோம்பித் தினங்கழித்தால் சோறுண்டோ தின்பதற்கும்
கஷ்டார்ச் சிதங்களைநீ கண்டபடி தானிறைத்தால்
நிஷ்டூர மன்றோ நிலைக்குங் குடித்தனத்தில்
சோம்பர்க் குதவிசெய்தால் துட்டர்க ளாய்த்திரிவார்
சாம்பலில் நெய்சொரிந்தால் தக்க பலன் றருமோ!
துட்டர்க் குபகாரந் துன்பத்தை மேல்விளைக்கும்
சிட்டர்க் குபகாரஞ் செய்தக்கா லேற்றமுண்டு
குடிகேடர் கொள்ளக் கொடுப்பாரோ நன்மதிகள்
நெடிய புகழ்வருமோ நெஞ்சிற் குறுதியுண்டோ?

போகும் வழிதனக்கும் புண்ணியம் வாராது
ஆகாத பேரை யழைப்ப ததர்மமென்றார்.

அன்பாக நீதி யறிய வுரைத்தாலும்
தன்மனம் போனபடி தானடப்பாள் காந்தாரி
பெற்று வளர்த்துப் பெரும்பாடு பட்டதனால்
மற்றொன் றுஞ்சொல்லாமல் மாதா வழிப்படியே
போகட்டு மென்றே பொறுத்தா ரவதானி
ஈகைக்கு மாறாக வேது முரையாராம்.

பாலமுருடு மப்போ பணிந்து நடவாளாம்
குலவுந் தன்மக்களுக்குக் கொட்டத் துணிவாளாம்
மாமியா ரோடுமவள் மல்லுக்கு நிற்பாளாம்
ஆமுன் படைகளைப்போல் அல்லவோ வென்படைகள்
உன்சுற்றம் வாராக்கால் என்சுற்றம் நாடார்கள்
என்சுற்றம் வந்தால் எரிச்சலென வுனக்கும்
ஆற்றிலே போகிறநீர் அப்பகுடி யையகுடி
ஊற்றை வாயன்றேட்டம் ஊரார தாகுமென்றாள்.
அருமைக்கோ முன்னுரை யாங்கொன்று கேளாளாம்
பெருமை சிறுமையெனப் பின்னொன்றும் பாராளாம்
இரும்பு நெஞ்சாகி யெடுப்பெடுத்து நிற்பாளாம்
துரும்பெடுத்துப் போடமாமி சொன்னாலுங் கேளாளாம்.

அழும்பு செய்நாளில் அவளுமொரு சூலானாள்
பழுதில்லாத் திங்கள் படிப்படியாய்த் தானிறையத்
தாயு மதுவேளை தாயத்தார் தம்மைநீயும்
போயே யழையென்று புத்திரனைப் பார்த்துரைத்தாள்.

அம்மா அவரால் அவதிகள் மேல்விளையும்
சும்மா விருவென்று சூக்ஷுமந் தானுரைத்தார்.

பிள்ளை புகலப் பிணங்கியே காந்தாரி
துள்ளி வெகுண்டு துடுக்கு டனேதுரைப்பாள்
ஆமவர் வாராமல் ஆகாத பேய்மகனே

சீமந்தஞ் செய்தால் சிரிப்பா ரிருப்பவர்கள்
குற்ற மதுபார்த்தால் சுற்றம் பெறுவதுண்டோ
சுற்றங்கள் வாராமல் உற்ற சுபங்களுண்டோ
கட்டி பருப்புடனே சட்டி நெருப்புடனே
விட்டவர் கூடல் விகித முலகினிலே
தறிதலை யாகித் தடுத்தொன்றுஞ் சொல்லாதே
பொறுமையா யாங்கவரைப் போயழை நீயுமென்றாள்.

அம்மை சொற்றட்டா அவதானி தான்பயந்து
விம்மி யயர்ந்து மெல்லவே தானடந்தார்
சிற்றப் பன்மாரைத் தெரிந்துடன் தான்பணிந்து
மற்றெம் மனைக்கே வரவேண்டு மென்றழைத்தார்
வெட்டுணி யப்போது வீரமுடன் றானுரைப்பார்
மட்டிப் பயலேயிங்கு வரவு முகமேது
எடுத்து வளர்த்துனை நான் ஈரைப்பே னாக்கிவிட்டேன்
அடுத்துக் கெடுக்குமுன்றன் அப்பன் குணம்புரிந்தாய்.

அப்போ தவதானி யடுத்தொரு வார்த்தைசொல்வார்
அப்ப னிறந்தார் அறியாச் சிறுவயதில்
துப்பான வுங்கள் சுகுண மவர்க்கின்றாகில்
செப்ப மேயுங்கள் உரையென்று தான்சிரித்துத்
தருணமிது நீங்கள் தள்ளிக் கழியாமல்
கருணையுடன் வந்து காப்பாற்ற வேண்டுமென்றார்.

எங்கெங்கே யென்றே யிருந்தவ ரப்போது
துங்கமாஞ் சீமந்தந் துன்னும்பொழு தழைத்தால்
வந்திடு வோமென்று மறித்தவர் சொன்னார்கள்
அந்த வுரைகேட்டே யவதானி வீடடைந்தார்.

தலையிலே சுற்புரட்டுந் தாயத்தார் தம்மையம்மை
நிலையி லழைக்கவென்று நேர்ந்தசொற் றப்பாமல்
போன தாலன்றோ பொறுக்கா வுரைபொறுக்கல்
ஆனே னென்றெண்ணி யவதானி நெஞ்சழிந்தார்.

காசத்தா லந்தக்கரியனொரு குண்டுணியும்
ஈசற் குரைப்பகர வில்வுலகம் விட்டொழிந்தார்.

அவதானி தன்னை யழைக்காமல் வெட்டுணியும்
புவியோர் பழிக்கப் பொருந்தாக் கருமஞ்செய்தார்
தமையன் மகனிருக்கத் தானேகரு மஞ்செய்தார்.
சமயம் தவறத் தனக்குள் வருத்தமுற்றார்.

சம்பாதனை களப்போ தப்பியந்த வெட்டுணியும்
கும்பலா யந்தக் குணமறியாக் காந்தாரி
வீட்டி லிருந்து வினைகள் பலபுரிந்து
தாட்டிக மாகநாளைத் தள்ளுவோ மென்றிருந்தார்.

அப்போ தவதானிக் கானசீ மந்தம்வரத்
தப்பாமல் காந்தாரி தானழைக்க வந்தார்கள்.

வெட்டுணி கைப்பாடாய் வேண்டுஞ் செலவுசெய்து
சட்டமாய்ச் சீமந்தந் தாமே நடத்திவைத்தார்
கடன்வாங்கிக் காந்தாரி கைக்குப் பணங்கொடுத்தாள்
திடமா யவருஞ் செலவிட்டுத் தான்மகிழ்ந்தார்.

கம்பீர மாகக் கலியாணந் தாம்நடத்தி
வம்பர்கள் வீட்டின் வளங்கண்டு தாமிருந்தார்.

மதனியுன் நல்லதங்கை மானாவதி யவள்தன்
புதல்வன் புதல்வியுன்றன் புத்திரர்தா மல்லவோ?
ஏக குடும்பமன்றோ வெல்லோரு நாம்பளம்மா
ஒகை யுடனே யொருசமு சாரமாக
இருப்போம் சிலநாள் இருவர்நா முள்ளமட்டும்
கருப்பென்ன நானும் கரத்திற் றரும்வரவை
ஒன்றாகப் போட்டே யொருகுடும்ப மாயிருந்தால்
நன்றா யிருக்குமிது நாட்டுக்கு மென்றுரைத்தார்.

கப்ப விற்பாதி களிபாக்குப் போட்டகதை
யொப்பந்த மாக வுரைத்தாரே வெட்டுணியும்

ஆமென் றவளு மனுமதிதான் கொடுத்தாள்.
தாமொன்றுஞ் சொல்லார் தவித்தார் அவதானி.

வந்து நுழைந்தாரே வம்பர்கள் வன்பிணிபோல்
சந்து கொடுத்தாளே சங்கையிலாக் காந்தாரி.

குடும்பங் கலைக்கவல்ல கோளனழி கண்டனுடன்
விடுபட்டி யாய்த்திரியும் வீரப் பிடாரியுமாய்
கங்கணங் கட்டிக் கலகம் விளைக்கலுற்றார்
வங்கை போல்வந்தவர்நல் வாழ்வு குலைக்கலுற்றார்
மாமி மருமகட்குள் மாளாத போர்விளைத்தார்
மாமி மருமகளும் மல்லுக்கு நிற்கவைத்தார்
கெக்கலி கொட்டியவர் கேலியது பண்ணிவிட்டார்
கைக்கொட்டி முக்காலும் கண்காட்சி கொண்டிருந்தார்

வீரப் பிடாரியவள் மெத்த வெடுப்பெடுத்து
காரம் முதிரவிட்டுக் கண்சாடை யாயிருந்தாள்
அழிகண்ட னோடி யவதானி யண்டைவந்து
பழிவரும் சும்மாப் பரியாமல் நீயிருந்தால்
பெண்டை யடக்கறியாப் பேதை யுலகிலுண்டோ!
தொண்டை கிழித்துச் சுண்ணந் திணிக்காயோ!
படித்துநீ யென்னாச்சுப் பாவியுனைப் பயந்தே
யெடுத்து வளர்த்தவளும் இம்சைப் படலாமோ?
என்றிங்கு சொல்லி யெழுந்தவர் தாயிடம்போய்
நன்றி யறியாதான் நன்மகனோ வுன்மகன்றான்,
பெண்டாட்டி யாலே பிடுங்குண்ணப் பார்த்திருப்பான்
திண்டாட்டங் கண்டுஞ் சிரித்து மகிழ்ந்திருப்பான்
நலந்தெரியா னென்றுறுதி நங்கைக்குச் சொல்லியுடன்
பலாமுருடின் பக்கலிற்போய்ப்பண்ண லுற்றார்வன்கலகம்"

ஐயோ குழந்தாய் அரும்பாவம் பண்ணினையே
வெய்ய கொடும்பாவி மாமியார் வீம்பதனால்
கொண்ட வன்கூடக் கொடுமைகண்டு பார்த்திருப்பான்
மிண்டை யினகையில் வெகுவா யுறுப்படைந்தாய்

கருப்பவதி நீயாச்சே காசுடமை மேலேயுண்டோ
சிரிப்பாரே பார்த்தவர்கள் சீசீயீ தென்னகொள்ளை
வாய்க்கு வளமா மடிநிறைந்த பக்ஷணங்கள்
ஆக்கிக் கொடுப்பாரார் ஆருமற்ற பாவியோநீ
நாங்கள் பரிந்தாலோ நன்றிகெட்ட காந்தாரி
நீங்களென் வீட்டில் நெருப்பென்று தான்கொதிப்பாள்
வெட்டுணி கண்டாலே வெட்டிப் புதைத்திடுவார்
மட்டில் லாத்துக்கம் மனதினி லாறவில்லை.

அப்பேச் சுக்கேட்டே யடங்காப் பலாமுருடும்
தப்பினா ளெங்கேயந்தச் சண்டாளி காந்தாரி
உற்ற வுபகாரம் ஒன்றெனக்கு நீரிழைப்பீர்
பெற்ற வென்தாய்க்குப் பெரிய மனதுபண்ணி
வரும்படி நீரும் வரியொன்று போகவிட்டால்
உருகி யவளும்வந்தே உற்றதுணை யாயிருப்பாள்.

என்றவள் கூற விதம்புரியு நல்லவர்போல்
நன்றென்று கூறியுடன் நற்கடிதம் போகவிட்டார்.

இப்படி யாக விருபுறமுந் தூண்டிவிட்டுத்
தப்பிலி மாக்கள் சதியிழைத்து விட்டார்கள்.

காந்தாரி யப்போது காதல்மகன் கிட்டணுகி
பூந்த வொருசிறுக்கி போராட்டங் கொள்கிறாளே
கொள்ளி வாய்நாறி மனங் கூசாமற்பேசுகிறாள்
ஊள்ளார் நகைக்க வுரங்கொண்டு பேசுகிறாள்
படுதுயரங் கண்டுமடா பாரா திருக்கிறையே
கெடுமதியாள் நெஞ்சைக் கிழியா திருக்கிறையே?
தாய்சொல்லைக் கேட்டுத் தனிமகனு நள்ளிரவில்
பேய்மனைவி தன்னைப் பிரியவுடன் றானயந்து
அம்மை பெரியள் அவளைப் படுத்தலாமோ
செம்மை நடக்கையன்றோ சிற்றடிநீ கொள்ளவேண்டும்
அடக்க முடைமையரிவையர்க்கு நல்லழகு

உடனொத் திருத்தலடி யுத்தமிகள் சுத்தகுணம்
துட்டருரை கேட்டுக் கெட்டழிந்து போகாதே
மட்டி லடங்கி மதிக்க வுடம்பெடுநீ
கண்ணை யிமைகாக்குங் கற்றவரைச் சொற்காக்கும்
மண்ணை மழைகாக்கும் மன்னவரைக் கோல்காக்கும்
கொண்டானைக் கொண்ட குலக்கொடி தான்காக்கும்
பெண்டீரைத் தங்கள் பிறங்குங் குணங்காக்கும்
மனைமாட்சி யின்றேல் எனைமாட்சித் தாயினுமில்
நினையாமல் தீங்குதனை நீசெய்யே லென்றுரைத்தார்.

இவ்வுரை கேட்டே யெழுந்த பலாமுருடும்
அவ்வென்று வாயில் அடித்தவ ளேதுரைப்பாள்
வாதனைப் பட்டு வருந்துமென் முன்புவந்து
நீதி கொழித்தாய் நினைவழிந்த நிர்மூடா
கிழவோரி கோளுரையைக் கேட்டென்னை மாட்டவந்தாய்
பழிகாரிக் காகப் பரிந்து துசமெடுத்தாய்
ஆண்பிள்ளை போல வடக்கியெனை யாளவந்தாய்
ஆண்பிள்ளை நீயோ அயலறியு முன்சமர்த்தை
ஆள வறியாத அண்ணைநீ பெண்படைத்தாய்
நாளு முறுப்புணவோ நானுனக்குப் பெண்டானேன்?
உன் போலிருப்பார் உரிமையைப் பார்க்கலையோ
தன்னொத்த பேரின் சவரணையைப் பார்க்கலையோ
பிச்சை வரும்படிக ளுள்ளவரும் பெண்டிருக்கு
மெச்சு நகைகள் விதம்விதமாய்ப் போட்டிடுவார்
கட்டுந் துணியொழியக் கண்டதுண்டோ வுன்னிடத்தில்
பொட்டை யதிகாரம் போது மடக்குசும்மா!
நீகெட்ட கேட்டுக் கென்வாய் கட்டவந்தையோதான்
ஆகட்டும் போவென் றதரம் பிதுக்கிநின்றாள்.

அவதானி யப்போ தகநொந்து தத்தளித்து
இவளெங்கு வாய்த்தா ளெனக்கென் றுளம்வருந்தி
ஆகிலும் பார்ப்போநா மானமட்டு மென்றுசொல்வி
தோகை நீயொன்றுந் துடுக்காகச் சொல்லாதே

கையிற் பணஞ்சேரக் காந்துநகை வாராதோ
மெய்யில் நகைபூண்டால் மேலாங் குணம்வருமோ
கல்வி யுரைப்பேன் கலைபல வோதிவைப்பேன்
நல்வி யெனப்பெயர்நீ நாட்டி லெடுக்கவேண்டும்
பெரியாரைச் சொல்லாதே பேரைக் கெடுக்காதே
அருமைத் துரைச்சியென்றே யாங்கவளைத் தூக்கி
வைத்தார்.

இப்படி யாகவவர் எத்தினைநாட் சொன்னாலும்
செப்பும் வசனமெல்லாம் திண்செவியிற் கொள்ளாளாம்
கழுதைக் குபதேசங் காதிலே சொன்னாலும்
பழுதில் குரலதற்குப் பாங்காய்ப் படியுமோதான்
அடித்துப் பயின்றாலும் அங்கொன்றுஞ் சத்தையில்லை
படித்துப் படித்துரைத்தும் பத்தா சொல்லேறவில்லை
முன்கோபத் தாயாரால் மூர்க்க முதிர்ந்திடுமாம்
தன்கா டயற்காடு தானறியாள் தாயவளும்
இரும்பு செஞ்சாகி மனமேலாப் பலாமுருடு
துரும்பெடுத் துப்போடச் சொன்னாலுங் கேளாளாம்.

வீரப் பிடாரி விரும்பும் புருஷனோடு
சாருஞ் சுவர்ப்புறத்தில் தப்பாமற் காத்திருந்து
அணையு மனைவிக் கவதானி தானுரைக்கும்
குணமா மொழியுமவள் கூறு மெதிர்வசையும்
கேட்டு விடிந்தவுடன் கெக்கலி கொட்டியவர்
பாட்டுகள் பாடிப் பரிகாசந் தாம்புரிவார்.

மறைவா யெழுதிவிட்ட வன்கடிதங் கண்டவுடன்
நறுங்கும் பிணியால் நமையும் புருஷனையும்
ஊரா ரகத்தில் உலைந்திட விட்டுவிட்டுப்
பாராமற் பெற்ற பயலுடன் தான்கிளம்பி
ஆகா வழியு மருளம் பலத்தைவிட்டு
வாகாகச் சென்னை வளனகர் தானணுகித்
தன்குணங் கொண்ட தறிதலைப் பெண்குணத்தைப்

பின்னுங் கெடுக்கப் பெற்றவ ளூற்றடைந்தாள்.
கண்டதைக் கேட்டதைநாம் கர்ப்ப வதிகளுக்கும்
உண்டென் றுதவல் உடம்பை வருத்துமென்று
காந்தாரி சொல்லக் கணிக்காமல் கர்ப்பிணிகள்
நேர்ந்து விரும்புவதை நீட்டிக் கொடுக்கவேண்டும்
கண்டதைக் கேட்டதைநாம் கர்ப்பவதிகளுக்கும்
உண்டென் றுதவாக்கால் ஊறு விளையுமென்றே
ஆகா வழியுரைத்தே வம்மகள் கேட்டுவரும்
ஆகாத பண்டமெலாம் ஆதரவாய்த் தான்கொடுக்க
வாங்கிப் புசிப்பாளாம் கொள்ளிவாய் வன்மகளும்
தூங்கி யிருப்பாளாம் துன்னிரவு நற்பகலும்
உலவித் திரியவென்றால் ஒப்பாமற் தான்படுப்பாள்
வலிய மதியுரைத்தால் வாயால் வதறிடுவாள்
உடம்புதித்துப் போயுமவள் உற்றமொழி கேளாளாம்
திடன்றப்பிப் போயுமவள் செம்மை பொருந்தாளாம்
பாடுகள் கோடியுண்டு பட்டாள் பழிகாரி
கேடான வீம்பதனால் கெட்டாளே துர்க்குணியும்
வயிற்றில் மதித்தவொரு மைந்தனைப் பெற்றதனால்
சயித்திய தோஷங்களால் தாளா வருத்தமுற்றுக்
கண்டங்கள் தம்மோடு கஸ்திமிகப் பட்டாலும்
முண்டை மகள்தனக்கு மூர்க்கந் தெளியாதாம்.

ஆங்கவள் தந்தையரா மாகா வழிபதியை
வீங்கு வியாதியது விண்ணுலக மேற்றிவிட
கொள்ளி யிடுமகனுங் கொண்டவளு மில்லாமல்
தள்ளிப் பிணமகனைத் தாயத்தார் சுட்டெரித்துச்
சாவோலை தாமனுப்பத் தர்ப்பை சமுக்காரமுதல்
மேவுஞ் சடங்கனைத்து மேன்மகனைக் கொண்டுபண்ணி
அவதானி யப்போ தங்கான வுதவிசெய்தார்
எவரானு மாங்கவருக் கேற்ற சுகங்களில்லை.

ஆகா வழிமகட்கு மாகாத போதனைகள்
வாகா யுரைக்க மதித்தவள் தான்நடந்தாள்

குண்டுணி செத்துமவர் கோட்டு முறையறிந்த
சண்டிப் பிடாரியென்பாள் சாகசம் பண்ணிவந்தாள்
அழிகண்டன் கையினிலே யாவதெலாம் பார்த்துவந்தாள்
கிழவியாங் காந்தாரி கேட்பார்சொற் கேட்டுவந்தாள்.

இப்படியாக விருக்கு மந்த நாளையிலே
ஒப்பிலாச் சுற்ற முடனிருத்த லேதமென்று
சென்னை நகர்துறந்து செல்லூ ரெனும்பதிக்கே
அன்னை மனைவியுடனாய்ந்தவ தானிசென்று
போயொரு சீவனத்தில் பொற்புடன் வீற்றிருந்தார்,
தாயத்தா ரங்கே தவித்து வயிறுலர்ந்தார்
வெட்டுணி நன்மகனாம் வீரப் பிடாரிதம்பி
நட்டணை யாக நலமறிந்து தானுரைப்பான்
ஆங்கவ் விளைஞனுந்தன் அப்பன் முகநோக்கி
வீங்கி யிருக்க விதியென்ன தந்தையரே
அண்ண னவதானி யண்டையிற் போயிருந்து
நண்ணியவன் மதிக்க நாமடங்கி வாழ்ந்திருப்போம்
என்ன விணங்கி யெழுதினார் வெட்டுணியும்
சின்னத் தனமாய்த் தெறிக்க விடலாமோ
அண்டின பேரை யகல விடலாமோ
மிண்டுகள் செய்வதில்லை வேற்றுமை பண்ணாதே
அண்ணன் மகனன்றோ அவதானி நீயெனக்கு
எண்ணி யுறவினரை யேங்க விடலாமோ
ஆதியில் உங்களைநான் ஆதரிக்க வில்லையோதான்
ஏதோ நடுவிலுற்ற வீனம்பா ராட்டலாமோ
சொந்த மதனிக்கிது சொல்லென் றவரெழுத
மைந்த னவ்வோலை தனைமாதா வறியும்படி
தந்து படித்துரைக்கத் தாயு மனமிரங்கி
முந்த அவரை முறையேயழை நீயென்றாள்
தாய்மனங் கோணாத் தனைய ரவதானி
மாய மிழைப்பவரின் வம்புக்குத் தான்விலக,

.'நீயாய்த் தலையெடுத்தாய் நின்சொத்திற் பங்குவாரோம
தாயத்தா ரெங்களைநீ தாங்குவதுந் தண்ணளியால்

தான்றோன்றி மைந்தன் தலையெடுக்கச் செய்வையானால்
தான் றருவான் நியித்தசதி யிலுதவுதனம்.''
இவ்வண்ண மாக வெழுதிக் கொடுத்தபின்பும்
அவ்வண்ணம் பிள்ளையையும் ஆங்கெழுதித்
தான்கொடுக்கச்
சம்மதிக்கச் செய்தே சலமுள்ள வெட்டுணியைத்
தம்மடையிற் சேர்த்துத் தரித்தா ரவதானி.

தகுதியுடன் படித்துத் தான்றோன்றி மேலவனாய்
மகிமையுள்ள ஜீவனத்தில் மாட்சிமை யோடிருக்க
வெட்டுணி சம்சாரம் வேறாய்ப் பிரிந்துவிட்டார்
கட்டந் தெளிந்து களிப்புடன் தாமிருந்தார்.

அவதானி தன்மனைவி யானதொரு சூலடைந்தாள்
அவமாகப் போகாமல் ஆண்பிள்ளை பெற்றெடுத்தாள்
பெற்றெடுத்த பிள்ளைதனை வைத்து வளர்க்கறியாள்
உற்றமுலைப் பாலேற்றி யோமுடிந்து போகவிட்டாள்!
மீண்டுங் கருப்பவதி யானாளே வீணியவள்
தாண்டு காலிட்டுத் தரியாமல் தானிழந்தாள்.

எல்லாப் படியாலும் ஏற்ற மதியுரைத்து
மல்லாடிப் பார்த்தும் மசியா மனைவியவள்
புருஷனைப் பேசப் பொறுக்காதோர் நாளவரும்
பருஷமாய் வீசப் படபடத்து மூர்க்கமுடன்
ஒன்றுக்குப் பத்தா யுரைத்துப் பகடிசெய்தாள்
கன்று மனத்தார் கணவனும் போய்மறைந்தார்
வாகில்லாப் பெண்டாட்டி வாய்த்ததற்குத் தான்புழுங்கி
ஏகாந்த மாக யிருந்தவர் எண்ணமிட்டார்
நன்றி யறிந்து நலமறிந்து நான்மகிழ
ஒன்றுங் குணத்தா லொத்துவரும் பெண்டொருத்தி
அம்புவியிற் கிட்டியெனக் காட்பட்டா ளாமாகில்
நம்பு முயிரேனும் நானவளுக் காக்கிடுவேன்
கொள்ளிவாய் நீலியிந்தக் கூளியைக் கைவிடுவேன்

துள்ளியுயிர் வருந்தச் சொல்லாற் சுடுமிவளை
விட்டுத் துறப்பதிலே கெட்டதொன்றும் நானறியேன்
கட்டுக் கடங்காத காளியால் மூளியானேன்
அம்மை யொருபுறத்தில் ஆவி பதைக்கவைப்பாள்
இம்மைச் சுகமறியேன் ஏதம் பலவடைந்தேன்
நெறிதவறி மேய வென்றால்நெ நஞ்சமிணங்காது
அறிவின் பயனிதென வாங்கவர் தான்மறுகி,
எக்குடி யானாலும் எச்சாதி யானாலும்
தக்க குணத்தோர் தருணியைக் கூடினக்கால்
மனதிற் கிசைந்தவொரு மாதெனக்கு வாய்த்தாக்கால்
எனது மனங்களிக்கு மேற்றவள் கிட்டினக்கால்
கைம்பெண்ணே யானாலும் கண்டு மணந்திடுவேன்
வம்பர்கள் தூறை வரவுசெல வில்லையேன்.

இந்த விதமாக வெண்ணமிட் டேங்கியவர்
சிந்தை கலங்கித் திடன்கெட்டுத் தானினைப்பார்
சித்திர வொண்கதையில் சித்திரித்துச் சொல்லுவணம்
புத்தி யழிந்தவொரு பேயன் பகருவிதம்
பசும்பாலர் அம்புலியைப் பற்றி நினைப்பதுபோல்
நிசமில்லாக் கற்பனையென் னெஞ்சில் நினைத்தேனே
குதிரைக்குக் கொம்புமுண்டோ கோக்குத்
துதிக்கையுண்டோ
பதடனெனை விரும்பும் பண்பான பாரியுண்டோ
அரபிக் கதையில்வரும் அம்பட்டன் போலொருநான்
கருதி யமைக்கலுற்றேன் சந்தர்ப்ப மானகரம்
ஆகாசக் கோட்டைகட்டி யைந்தறிவு நான்றுறந்தேன்
சாகாசக் கொள்ளிதீமை தலையோடும் போகாது.

என்னப் புலம்பியவ ரேக்கமுற்றுத் தாமிருந்தார்
பின்னுமப் பெண்பேயும் பிள்ளைபெற்றுத்
தான்படுத்தாள்
பொன்னின் பதுமையெனப் பொலிந்ததே யக்குழவி
மின்னலைப் போல விளங்கினா னப்புதல்வன்

தாதிவைத்துப் புத்திரனைத் தாம்வளர்த்தார்
தந்தையரும்
போதவுயி ரவன்பால் பொருந்தவைத்தார் மேலவரும்
அப்புதல்வ னப்போ தருமையாய்த் தான்வளர்ந்தான்
மெய்ப்புதல்வ னப்போ வினோதமாய்த்
தான்வளர்ந்தான்
பிஞ்சிற் பழுத்த பெருங்குணங்கள் தாமுளவாம்
நெஞ்சிற் கருணை நிலையுண்டா மாண்மகற்குப்
பிச்சைக்கு வந்தாற் பெருநாழி கொண்டிடுமாம்
கொச்சை மனிதருடன் கூடா தொழிந்திடுமாம்
பொன்னான மேனி புழுதிபடக் கூசிடுமாம்
கண்ணா லழுமவரைக் காணவுந் தானழுமாம்
களித்தாரைக் கண்டக்கால் தானுங் களித்திடுமாம்
சுளித்தாரைக் கண்டக்கால் துள்ளி விலகிடுமாம்
யாழி னிசைபாட வானந்தங் கொண்டிடுமாம்
சூழுஞ் சனமகிழ சொல்மழலை பேசிடுமாம்
வந்தவர்க்குப் பன்னீர் வகையுடனே தான்றெளிக்கும்
சந்தன நல்கிநல்ல தாம்பூலந் தான்வழங்கும்
சீராக நீராடும் தேகங் கமகமென
நேரான செஞ்சாந்து நித்தியந் தான்புனையும்.

அப்படிப் பட்ட அழகு மகன் றனக்கும்
ஒப்பாதாம் பால்கொடுக்க வுண்மையாய்ப் பெற்றவட்குக்
கொள்ளிவாய் நீலி குழந்தைக்குப் பாலுதவாள்
பிள்ளைகள் பெற்றுமவள் பிள்ளைக் கனிவறியாள்
தானிட்ட முட்டைகளைச் சர்ப்பங் குடிப்பதுபோல்
மானித்துப் பெற்றவிளம் மக்களைப் போற்றாளாம்
சீராட்டிப் பாட்டி சிறுவனைத் தான்வளர்த்தாள்
போராட்டத் தாய்முகத்தில் புத்திரனைக் காட்டாமல்,
இந்தச் சுகமு மிட்டவீசன் பொறுக்கவில்லை
அந்தச் சிசுவை யவமிருத்து வந்தடைந்து
ஆண்டிரண் டாமுன் அரியவுயிர் பறிக்க
மாண்டவ ரானார்கள் வாஞ்சையுடன் வளர்த்தார்.

நாட்டு ளோர்கூட நடுங்கி மனந்திகைத்தார்
பாட்டியார் சாம்பி பயித்தியம் தானடைந்தாள்
அவதானி நொந்தேதம் மைந்தறிவும் போயழிந்தார்
தவியாத தாயுந் தவித்துப் பதைத்தழுதாள்
தாயத்தார் மேலுக்குத் தாம்வந் துபசரித்தார்
மேயவருள் ஈரமற்ற வெங்கண்ண ரேதுரைத்தார்
பெற்றிடு மக்களுக்குத் தந்துகள் கூடவரக்
குற்றங்கள் செய்தாய்நீ கூடுமுன் ஜன்மமதில்
தத்தொன்று கொண்டிடப்பின் பெற்றவைதக்குமென்றார்
மெத்த வகமெலிந்த வேளையி லிந்தவிதம்
சொல்ல வவதானி சுள்ளென் றுடன்வெகுண்டு
நில்லாமல் வீடுவிட்டு நீங்குமெனப் போயொழிந்தார்.

குழந்தை யிழந்த கொடுந்துயர் தன்னாலே
அழன்ற வுளந்தனக்கோ ராறுதல் தேடவெண்ணிச்
சிந்தை தெளியவெகு தேசங்கள் தான்றிரிந்து
பந்த முடனே பலபட்டினம் பார்த்துவந்து
சீராருங் காவிரிசூழ் தென்னாதி யூரதனில்
பேராற் பெரிய பெருங்கலைக் கூடம்வைத்துப்
பத்துத் திசையும் பரிவாகக் கொண்டாட
வித்தைகள் சொல்லி விரியும் புகழ்நிறுத்தித்
தத்துவ மாய்வதினில் தன்விசனந் தான்மறந்து
பித்துணிப் பெண்டாட்டி போனவழி போகவிட்டு
ஈசற்கு நாளொழித்தே யெல்லோர்க்கு நல்லவராய்
ஆசையகத் தடக்கி யவதானி தானிருந்தார்.

ஆதியூர் தன்னி லழகுள்ள வீடிரண்டு
தீதறக் கட்டித் திறமாக வாழ்ந்திருந்தார்.

ஒன்றிற் சமுசார வோதக்கடல் இருக்க
ஒன்றிற் கலையாய்ந்தே யுத்தமர் வீற்றிருந்தார்.

ஏதோ விருக்கையிலே யின்னமுந் தன்மனையாள்
காதலுறக் கலந்து கர்ப்பமுந் தான்றரித்தாள்.

பத்தான திங்களும்நோய்ப் பாலகனைப்
பெற்றெடுத்தாள்
தத்துகள் வாராமற் றற்பரன் காத்தளித்தான்.

ஆண்டு நிறைந்தே யறுதிங்க ளாகையிலே
கீண்டு நகத்தாலே கிள்ளினாள் கொள்ளியன்னை
பீரிட் டிரத்தமெழப் பிள்ளைதன் கன்னமதில்
வீரிட் டழுதுதந்தை மெய்ம்மடியிற் போய்விழுந்தான்.

ஆவி பதைக்க அவதானி தானெடுத்துப்
பாவி யுனக்குப் படுகேடு மென்னவென்று
சுவட்டி லறையச் சுடுகொள்ளி முண்டைமகள்
அவக்கென்று வாயிலடித் தாங்காரப் பட்டவளும்
பிள்ளையும் வேண்டேனான் கொள்ளியும்பின்
வேண்டேன்
உள்ள மகனை யுருக்கமுடன் நீவளர்ப்பாய்
நாட்டாரைப் போலேயு நான்கண்ட தென்னவுண்டு
வீட்டில் விஷமாகி விட்டாயே நீ போவி
படுபாவி யுன்னானான் பட்டது கோடியுண்டே
கொடும்பாவி யுன்னாயி கொன்றெனைக் கூலவைத்தாள்.

பாவையுரை கேட்டுப் பாக்கிய மென்றவரும்
ஆவின் பாலிட்டே யருமை மகவளர்த்தார்.
புண்ணான நெஞ்சாறப் பூமகனைக் கண்டதினால்
கண்ணாள னென்றெயக் கான்முளைக்குப் பேருமிட்டார்
அப்பா லகன்றாலும் அம்மைமுகம் பாரானாம்
துப்பான தந்தைதனைச் சொப்பனத் திலுந்துறவான்
அரியவழி போனாலும் அப்பனுடன் போவானாம்
பெரியமலை காடெனிலும் பின்னே தொடர்வானாம்.

அக்குழந்தை யிவ்வா றருமையுடன் வளரத்
தக்க மகிழ்ச்சியுடன் தந்தையும் தானிருந்தார்.

தாயாதி வீட்டில் தலைவர்கள் போயொழிந்தார்
மாயாத வெட்டுணியும் மற்றையவர் நன்மனையாள்
அழிகண்ட னோடு மடைய மடிந்தார்கள்
இழவுரிமை யாங்கவர்க்கு மேற்றபடி தானடத்தித்
தான்றோன்றி மைந்தனுக்குத் தக்கமதி யுரைத்தே
ஈன்றாள் மனப்படிக்கே யெல்லா வுரிமைசெய்தும்
அவரவர்க் கேற்ற வரியவுப சாரம்பண்ணி
அவதானி தானிருந்தார் ஆனகலையாய்ந்து
வேதப் பொருளுணர்ந்த வேதாந்தி யாங்கொருவர்
போத மனுட்டானம் பொய்யா வசனமுள்ள
நிசயோக சித்தியென நேர்ந்த பெயருடையார்
கசியு மருளுடையார் காலவியல் கண்டறிவார்
அவதானி தன்மனதிற் காறுதல் சொல்லவல்லார்
புவியின் சுகந்துறந்து போம்வழியில் நோக்கமுள்ளார்
உயிருக் குயிராக வுற்றவ தானியர்க்குத்
தயிரியஞ் சொல்லித் தளர்வை யொழித்திடுவார்
தளர்வை யகற்ற வல்லதண்டுணைவ ரின்னொருவர்
இளமை யடக்கமுளார் ஏற்கு மதியுடையார்
வீணெண்ணங் கொள்ளாதார் மேலைக் கருத்துடையார்
காணு மெவரிடத்தும் கண்ணோட்டந் தானுடையார்
சுமதி யெனும்பெயரார் தோழ ரவதானியர்க்குச்
சமயத் துயிருதவும் தன்மையுள்ள மெய்த்துணைவர்
ஈங்கிவ் விருவ ரிணக்கத்தால் உள்வருத்தம்
தாங்கி யவதானி தைரியங் கொண்டிருந்தார்
ஆசுகவி பாடி யவதானஞ் செய்தவரும்
பேசு புகழ்மேவிப் புலவருந் தானிருந்தார்
கொள்ளிவாய் நீலியின்னங் கூடியே சூலடைந்து
மெள்ளவே வீண்றோளோர் வீரமுள்ள வாண்மகனை
மூன்று பிராயமந்த முத்துமகன் வளர்ந்தான்
தோன்றும் வலிமையுள்ள சுந்தரன் தான்வளர்ந்தான்
தோகையு மக்காலம் துன்னிக் கருத்தரித்தாள்

ஆகா வழியான அம்மையிடம் போகவென்றே
ஏழைக் குறும்பனெனு மேற்றவுடன் பிறந்தான்
வாழுங் கொல்லூர்க்கு வரிசையாய்ப் போகவென்று,

தன்னற் கணவனுரை தட்டிக் கழித்துவிட்டு
முன்னிணைப் பிள்ளையோடு மூளியுந் தான்முடுகிப்
போனாளே போனாளே புத்திகெட்ட பெண்ணீலி
தானாகப் போனாள் தலைமதங் கொண்டவளும்
போன விடத்தினிலே பொன்மகனைத் தான்வளர்க்க
ஆனபே ரில்லாமல் ஆங்கவன் மாண்டுபட்டான்
மகன்பட்ட செய்தியந்த மானவனுந் தான்கேட்டு
மிகவு மனந்தளர்ந்து மெய்ம்மறந்து மேலழுவார்
உண்டான பாவமெல்லாம் ஒருருவ மாய்த்திரண்டு
பெண்டாக வந்தாளே பெண்ணீலி யென்றனுக்கு
நகைக்க வுடம்பெடுத்து நன்மையற்ற மாபாவி
பகைத்து மனம்பதைக்கப் பண்ணினா ளென்னசெய்வேன்
பத்தா வுயிரறுக்கும் பாதகி யென்றழுவார்
நித்தங் கொடுமைபுரி நீலியே யென்றழுவார்
மனங்கொதிக்க வைத்தாளே மாபாவி யென்றழுவார்
இனமென்ன செய்வாளோ வேழையே னென்றழுவார்
ஈரமற்ற பாவி யிரக்கமற்ற சண்டாளி
தாரமென வந்த சதிகாரி யென்றழுவார்
ஏதேது செய்தாய் இரும்பொத்த வன்மனத்தாய்
தீதின்ன மென்னவென்ன தேடுவா யென்றழுவார்
நானும் வருந்தி நவின்றதெல்லாங் கேளாமல்
ஊன மனதின்படி யொட்டாரங் காட்டிவிட்டாய்
காலிலே நின்றுமொரு கண்மணியைக் கொண்டுசென்றாய்
பாலனைத் தின்றாய் பழிகாரி யென்னசெய்வேன்
என்னப்பா கண்மணியே யெங்கு நடந்துவிட்டாய்
பன்னி யழைக்கப் பரிந்தெதிர் வாராயோ
முத்தண்ணா முன்புவந்தோர் முத்தந்தா வென்னரசே
பத்தியாய்ப் பாட்டியிதோ பாலடிசி லூட்டுவாளே

கல்லோடா வுள்ளங் கசந்தோமோ நாங்களப்பா
இல்லையோ தெய்வமுந்தா னெங்களுக் கென்ன
செய்வோம்

மண்ணுக் கிரையாய் மணிமகனைத் தான்கொடுத்தாள்
கண்ணிலே காட்டாமல் கால்மாண்டு போகவைத்தாள்
இன்ன பரிசாக விவரமுது வாடுகையில்
தன்னை மதித்திருக்குந் தையல்நிலை பகர்வாம்
சூலும் வளர்ந்துபின் பச்சூர்ப்பணகை யீல்றெடுத்தாள்
ஏலங் குழலாளை யேற்றமுள பெண்ணமுதை
கைக்குழந்தை யந்தக் கலியாணி தன்னோடு
தக்க குணம்படைத்த தாயின் மனையகன்று
மறித்துங் கணவனிடம் வந்தாளே வாய்நீலி
கறுத்து மனங்கொதித்துக் காந்தாரி மாமியுடன்
வாலாய மாகவவள் வன்போர் விளைக்கலுற்றாள்
காலங்கள் கண்டஅந்தக் காந்தாரி தானிளையாள்
பொறுமையிலாக் காந்தாரி போரி லிளைக்காளாம்
கறுவுடைய வாய்நீளி கல்ல லிடுவாளாம்
பேயாட்டம் பேய்க்கூச்சல் பேயமுகை வீட்டினிலே
வாயாடிப் பட்டிமக்கள் வாழ்வு குலைந்தார்கள்.

அருமையாய்த் தான்வளர்த்த வன்னைக்குத் தான்பரியின்
பெருமை குலைக்கவந்த பெண்ணீலி வைவாளாம்
பெண்ணீலி முண்டைவழி போகாதே யென்றுரைத்தால்
கண்கண்ணீ ராயமுது காந்துவாள் காந்தாரி.
இருவரையும் வேறா யிருத்தினாலூர் நகைக்கும்
இருவருறை வீடோ வெரியுஞ் சுடுகாடு
வீட்டி லிருப்பதிலை வெம்பு மனத்தவரும்
தாட்டிகயோகியுடன் சற்காலந்தான் கழிப்பார்
வேளைக்குச் சோறின்றி மெய்வருந்தித் தான்படுவார்
நாளுக்கு நாள்மெலிந்து நைந்தா ரவதானி
படும்பாடு போதாமற் பாவலர் தாயுமப்போ
கொடும்பாவி யென்னுமொரு கூடப் பிறந்தவளை

முளையி லறுத்துலகில் விடுபட்டி யானவளை
விளையுங் கலகமென்றால் விட்டேனோ வென்பவளை
பல்லுக் கருகிப் பதறாமல் வைபவளை
இல்லாதும் பொல்லாதும் இட்டுப் பிணைப்பவளை
உறவு போலுற்றுக் குளவிபோல் கொட்டுவாளை
கறுவி நடுத்தெருவில் கைமண் ணிறைப்பவளை
ஒண்டின வீட்டுக் கிரண்டு நினைப்பவளை
மிண்டுகள் செய்துபின்பு வீண்பழி போடுவாளை
சிறுதனந் தேடத் திறமிக்க கொண்டவளை
அறுதாலி யாரை யழைத்துத் தன்வீட்டிருத்தி
நன்மகன் பேரதனை நாளுங் கெடுப்பதற்குத்
துன்மை பலவிழைக்குந் துற்குறியைக் கூட்டிவைத்தாள்
அழிந்து விழுவாளும் ஆகாத தீங்கிழைத்துக்
குழந்தை கழுத்தில் குலவுமணி முதலாய்
வீட்டில் திருடி வெளியிலே விற்றிடுவாள்
கேட்டால் விளக்கணைத்துக் கிட்டிச் சபித்திடுவாள்
கலகம் விளைத்துக் கைகொட்டித் தான்சிரிப்பாள்
அலகை போலாடி யமர்க்களஞ் செய்திடுவாள்
இதுவும் விதியென் றிருந்தா ரவதானி
மதிஇலாத் தாய்க்கும் வருந்திப் பயந்திருந்தார்.

கண்ணாளன் தந்தையவர் காலையொட்டித்
தானிருப்பான்
எண்ணி யவரோடே யெப்போதுங் கூடிநிற்பான்
மனது கசந்தவரும் வண்மையுள்ள யாத்திரையில்
தனையனுடன் கூடத் தான்போய்த் திரியலுற்றார்
மலையாளம் நீலமலை மற்றுமுள்ள நாடுகளில்
நிலையான காட்சிகண்டு நெஞ்சாறித் தாம்வருவார்.

புலியிருந்த தூறதுபோல் பெண்டிருந்த பொய்மனையில்
சலியு முளத்தவரும் தங்கியே தானிருப்பார்.

சுகத்தின் வியாஜமிட்டுச் சூழ்ந்த கிராமங்களில்
வகையாகப் போயிருந்து மைந்தனுடன் மீண்டிடுவார்.

வந்தவர்க்கும் போனவர்க்கும் வாங்காமல் வித்தை சொல்லி
சிந்தை நோயுள்மறைத்துத் தேறிச் சிரித்திருப்பார்
மைந்தனைக் கண்டுமுகம் வாடாமற் றானிருப்பார்
மைந்தனு மாங்கவரை வாங்காமற் காத்திருப்பான்.

தந்தை பசித்திருக்கத் தன்பசி தான்தணியான்
தந்தை படித்திருக்கத் தான்மகிழ்ந்து கேட்டிருப்பான்
கவனங்கள் பாடக் கண்டு மகிழ்ந்திருப்பான்
இவ னதைக்கூட விசையப் படித்திடுவான்
தந்தையரைக் கொண்டாடத் தான்மகிழ்ச்சி கொண்டிடுவான்

தந்தை யுரைதானுஞ் சத்திய மென்றிருப்பான்
கண்ணாளன் தன்முகத்தைக் கண்டவ தானியரும்
புண்ணான நெஞ்சீற லெண்ணாமற் றானிருந்தார்.
இவ்வா றிருக்க விராஜநகர் தன்னுளொரு
செல்விதாஞ் சீவனமும் சேர்ந்துவரத் தானுணர்ந்து
பெற்றாள் மனைவிகளைப் பேர்த்துப் பிரித்துவைக்க
அற்ற மென்றெண்ணி யவதானி தான்முடுகித்
தாயைப் பதியில்விட்டுத் தனிமனைவி மக்களுடன்
போயப் பணிபொறுத்துப் புண்ணியரு நாட்கழித்தார்.

மீண்டுங் கருத்தரித்து வீணிமகள் தான்படுத்தாள்.

ஆண்டவ னின்னருளால் ஆண்மகன் தான்வளர்ந்தான்
சீராள னென்றேயந்தச் செல்வனுக்குப் பேருமிட்டார்.
நேரா யவன்வளர நெஞ்சங் களித்திருந்தார்.

என்ன பிறந்தாலும் ஏதுமதி சொன்னாலும்
அன்னவள் மூர்க்கம் அணுவுங் கரையவில்லை.

வேலைகள் செய்வோரை வேர்த்து வெடுவெடுத்தே
ஏலாத வேச்சேசி யில்லம் விடப்புரிவாள்
மூலைப் படுத்து முதுகுறட்டை தான்விடுவாள்
காலை மடக்காள் கணவனைக் கைநொடிப்பாள்
பால னழுதால் படுக்கென் றுதைத்திடுவாள்
கொல நமன்போல் குடிகொண்டு தானிருந்தாள்.

ஆதியூர் தன்னில் அமர்ந்தவொரு தாயவளும்
நீதி யறியாத நீசர்க் குதவிசெய்தே
இச்சகம் பாடுவோர்க்கு மேற்ற பொருள்வழங்கி
நிச்சலும் வேளைதப்பி நேரு மமுதருந்தி
தள்ளா துடம்புடனே தானாக வேலைசெய்தே
எள்ளியே யூர்நகைக்க விங்குமங்குந் தானோடி
பிள்ளை சிணுங்கான் பெரும்பணந் தானனுப்பக்
கொள்ளு மதனையெல்லாம் கோணற் செலவுசெய்து
சுடுகொள்ளி மண்டை சொறிந்துகொள்ளத் தேடினாற்
போல்

கொடும்பாவி தன்னோடு கோடி சமர்விளைத்துத்
தனக்குஞ் சுகந்தேடாள் தம்மவர்க்கு மும்முரமாய்க்
கனக்கக் கொடுத்தாலும் கண்டோமோ வென்றுரைப்பார்.

கொண்ட பேரெல்லாரு முண்டையிவள் சாகவென்பார்.

சண்டிக ளெல்லாம் தலைதடவிக் காசடிப்பார்.

ஊற்றை வாய்தேட வொருகர்ப்பூர வாயழிக்கும்
நேற்றி யீதென்றே நீசர் நொடித்திடுவார்.

இந்தப் படியா யிருந்தாளக் காந்தாரி
சிந்தை வருந்தித் திடன்கெட் டவதானி
ஈசன் செயலென் றிரங்கியே தானிருந்தார்
பேசுங்கலை யோதும் பெற்றி யவர்க்கிருந்தும்

ஆசை மனைவிமடம் ஆங்கவர் போக்கறியார்
அம்மைக் கறிவும் அவதானி சொல்லறியார்
நம்மைப் படைத்தவொரு தாதன் செயலிதன்றி
என்ற னியல்பதனில் ஏதோ பழுதிருக்கும்
நின்ற குறையால் நெருங்கிய கட்டமிது
பெற்றாள் மனைவிக்ளைப் பேசல் பிசகிதென்று
குற்றந் தனதாய்க் குறித்தவர் தானழுதார்.

அம்மையு மப்போ தழகான பேரனுக்குச்
செம்மையா யேழுந் திரும்பாச் சிறுவனுக்குக்
கண்ணா லந்தான்புரிந்து கண்களிக்கப் பார்க்கவென்று
பெண்ணை யமர்த்திப் பெருமுகூர்த்தந் தானுமிட்டே
உந்தன் மகனுக் குபநயனப் பந்தலிலே
கந்தனே கல்யாணம் கண்ணில்நான் காணவேண்டும்
பேராற் பெரிய பெருங்குடியில் பெண்ணமர்த்திச்
சீராக வேண்டுஞ் சிறப்பெல்லாஞ் செய்துவைத்தேன்
கல்யாண வேலை கருக்காய் நடத்திவைப்பேன்
எல்லா மறிவேன் எதிர்ஒன்றும் பேசாதே
ரூபா யிரண்டுநேர் ரொக்கங் கடன்வாங்கி
நீவா மகனே நில்லாது கல்யாணம்
என்னவே யோலை யெழுதிவிட்டாள் காந்தாரி
அன்னைக்கு மாறா யவதானி சொல்லறியார்
ஆதியூர் தன்னில் அவதானி நன்மகற்கு
வேத முறையால் விளங்கு முபநயனம்
ஆன விவாகம் அம்மை மனப்படிக்கே
மானமாய்ச் செய்து மனது கனிந்தவரும்
சென்னைக்கு மீண்டு திறமாகத் தானிருந்தார்
அன்னையு மாங்கே யகமகிழ்ந்து தானிருந்தாள்.

சின்னஞ் சிறுபேரன் சின்னஞ்சிறுப் பெண்டாட்டி
தன்னை யகத்தழைத்துத் தக்கசீர் தானெடுத்து
வங்கானுந் தொங்கானும் மாட்டிக் கிளுகிளுத்துச்
சிங்கார மாகவம்மை சீராட்டித் தானிருந்தாள்.

இப்படி யாக விருக்கின்ற நாளையிலே
செப்ப முடையவந்தச் சென்னை நகரதனில்
க்ஷத்திரியச் சாதி கனத்தகுடிப் பிறந்தாள்
வித்தை யறிந்துகுண மேவும் புகழுடையாள்
அறிவுடை யார்மாட்டே யனுதினந் தான்பழகி
மறுவுடை யார்தம்மை மதித்து முகம் பாராத்
தேவதத்தை யென்னுந் திருநாமம் பூண்டவொரு
காவல் மனதுடைய கட்டழகி யாங்கவளும்
அவதானி தம்மை யறிய விரும்பினளாய்
கவலை யுடனனுப்பக் கண்டவரும் அண்டியவள்
மெய்யறிவு மீக்குணமும் மேலான நல்லுருவும்
அய்ய ருளமழிக்க யாங்கவரு மையலுற்றார்
தன்னுடைய மெய்ச்சரிதம் தாழ்குழலுங் கேட்டறியப்
பன்னி யுரைத்தாரே பாவலரும் பாங்காக.

மங்கையுந் தன்னுடைய மாசரிதம் பேசிநின்றாள்
பொங்கு புகழுடையான் போந்தபொருள் மேலுடையான்,

நரசிங்க ராஜுவெனு நாமத்தான் நாட்டவர்கள்
துரைசிங்க மென்றுபுகழ் சொல்லுந் திறமுடையான்
சிறந்த அவர்தமக்குச் சீமந்த புத்திரியான்
பிறந்து வளர்ந்துவந்தேன் பேரும்பிர திஷ்டையுடன்
கல்வி யறிந்தேன் கலைதெரி யுத்தமர்பால்
செல்வ மிகுந்திருந்தேன் சீலமுள்ள வையரிடம்
சாத்திரங் கற்றறிந்தேன் தப்பாத நல்வழியில்
ஏற்றமாய் நானிருந்தே னென்னை யவர்தாமும்
பருவ நிறைந்துவரப் பர்த்தாவைத் தான்தேடி
திருவ துவைசெய்து திருநாடு சென்றடைந்தார்.

தந்தைவைத்த மெய்த்தனத்தைத் தான்வாரி யென்கணவன்
சிந்திவிட்டுத் தாசிகளைத் தேடியே சீரழிந்தான்
சூதாடிக் கட்குடித்துத் தோற்றான் வெகுபணத்தை

வாதாடி யென்றன் வரிசைதனைக் குலைத்தான்
பூணு நகைகளெல்லாம் போக்கி யழிம்புசெய்தான்
கோணல் வழிநடந்துங் கூசாமற் றானிருந்தான்.

தொத்தும் பிணியால் சொரூபங் குலைந்துகெட்டான்
பித்தனாய் நல்லறிவு போகித் திரியலுற்றான்
ஆங்கவனுக் கெட்டா தடக்கிச் சிறிதுதனம்
நான்கரு திவைத்து நலங்கெட்டுப் போகாமல்
கஞ்சி குடித்துவித்தை கற்றவர் நற்றுணையால்
நஞ்சுடைய நாள்களைய நான்கழிக்கப் பார்த்திருப்பேன்.

நெஞ்சின் மெலிவுபட நீள்கலைக ளாய்ந்திருப்பேன்
தஞ்ச மெனவீசன் தனியடியைப் போற்றிநிற்பேன்.

தனித்திருக்கு மென்னைத் தனமதங்கொள் வம்பர்சிலர்
மனத்தைக் கரைத்து வசப்படுத்தப் பார்க்கிறார்கள்
பெண்பழி பூணப் மெருமிதங் கொண்டவர்கள்
என்சிந்தை யோராமல் எண்ணமிட்டுக் கொண்டிருப்பார்.

இச்சகம் பாடிமெத்த வென்னைப் பசப்பவரும்
பிச்சரை மெள்ளமெள்ளப் பேசிப் புறக்கணிப்பேன்
பதறி நடந்தவரைப் பாராமல் தூரவைக்கச்
சிதறு மனத்தார் தெருவிற் குலைக்கலுற்றார்
பேரூருங் கட்டிவிட்டுப் பெண்பாவங் கொண்டார்கள்
சாருநரகை விட்டுத் தாமீளார் சத்தியந்தான்.

தொப்பை பெருத்தவருந் துள்ளுக் கடாக்களுமாய்
எப்போது மென்னை விழுக்கவழி பார்த்திருப்பார்
நம்பு மனிதரென்னை நட்டாற்றில் கைவிடுத்தார்
கும்பலாய் வந்துபொருள் கொண்டுடன் போயொளித்
தார்;

பந்துக்க ளெல்லாரும் பார்த்து நகைக்கலுற்றார்
வந்தது கொண்டு வசைசொல்லித் தாமிருந்தார்
நல்லதிக் கில்லையைய நல்கூர்ந்த வென்றவனுக்கும்
எல்லா மறிகடவுள் ஏற்றதுணை யென்றனுக்கும்

ஈதென் வரலாறென் றேங்கியவன் தான்முடித்தாள்
வேதியர் தான்கேட்டு வெம்பி மனந்தளர்ந்தார்.

தேற்றரவு சொல்லித் தெரிவை மனத்துயரை
யாற்றி யவதானி யன்பது காட்டிவந்தார்.

மறுவிலா நேசம் வளர்ந்த தவர்களுக்குள்
திறமான நேசம் தினமு முதிர்ந்துவர
வாரத் தொருக்கால் வனிதை யவள்வீட்டில்
பாரக் கலைகள் பரிந்து படிப்பதிலும்
வாடு மனது மகிழ்ச்சி யதுகூர
வேடிக்கை யாக வின்னாணஞ் சொல்வதிலும்
காரணன் றன்னைக் கருத்தில் நினைப்பதிலும்
பூரணன் பாதம் புகழ்ந்து துதிப்பதிலும்
காலங் கழித்துக் களித்தவர் தாமிருந்தார்.

வேலை புரிந்து விகிதமாய்த் தாமிருந்தார்.

ஒருத்தர் படிக்க வொருத்தர் செவிகொடுப்பார்
ஒருத்தர் உரைக்க வொருத்தர் எழுதிடுவார்!
அன்ன மிசைபாட அய்யர் களித்திடுவார்
பன்னி யவர்பேசப் பார்த்தவள் தான்மகிழ்வாள்.

கண்ணாளன் கூடக் கலந்து களித்திருப்பான்
கண்ணாளன் தாய்போலக் காரிகையுந் தானிருப்பாள்
பாலும் பழமும் பரிந்தவள் தான்கொடுப்பாள்
பாலனு மன்னையெனப் பாலித்துத் தானடைப்பான்.

அன்னை யரவணைப்பை யாங்கறியாப் பிள்ளையவன்
அன்னை யிவளாமென் றானந்தங் கொண்டிருந்தான்.
இப்படி யாக விருவருஞ் சிந்தையொத்துத்
துப்பான காரியங்கள் தோராமற் செய்துவந்தார்
அவதானி யப்பொ தகத்தில் நினைக்கலுற்றார்
புவனம் படைத்தோன் புதுமை தனைவியப்பார்
ஆனதுக் காகாதும் ஆகாதுக் கானதையும்
தானு மிணைப்பானோ தற்பரன் நீதியீதோ
என்விதி நீசமென வெண்ணினே னிம்மடந்தை
தன்விதி போலும் தலத்திற் கிடையாது!
குடிகேடன் பித்தன் கொடிய பிணிகளுக்கே
இடமாக நின்றோனை யேற்ற கணவனெனப்
பாராட்டி யென்ன பலன்கண்டா ளிம்மாது
போராட்டங் கொள்ளு மொருபூதகி தன்னாலே
நான்பட்ட பாடனைத்துந் தான்பட்டாள் சீமாட்டி
கான்பட்ட தீயில் கவிபட்ட மானதுபோல்
என்றே யிரங்கியவ ரேங்கி மனம்மடிந்து
கன்றி வருந்தியந்தக் காரிகைக்குச் சோகமுற்றார்.

தன்னை யறியாமல் தானவளைக் காதலித்தார்
அன்னமு மவ்வாறே யையர்மே லாசைகொண்டாள்
ஒருவர் மனதை யொருவர்க்குச் சொல்லாராம்
இருவரு முள்ளே யெரியின்மெழு காவாராம்.

தேவதத்தை யப்போது சேரும் புலவர்களை
ஆவலாய் நாடும் அநந்தம் பிரபுக்களையும்
தன்வீ டணுகாமல் தாமகலத் தானிழைத்தாள்
பின்னொருவர் வாராமல் பெருங்காவல் போட்டு
வைத்தாள்
அவதானி பேச்சில் அனவரதந் தான்மகிழ்வாள்
அவதானி பாட்டிலவள் ஆனந்தங் கொண்டிடுவாள்
தானுங் கவிபாடித் தையலவன் கைக்கொடுப்பாள்.

மானுங் கவிபாடி மைற்றவள் கைக்கொடுப்பான்.

உள்ளக் கருத்தை யொளித்தவர் தாமிருப்பார்
கள்ளக் கருத்ததனைக் கட்டியவர் மறைப்பார்
இரவெல்லாந் தூங்காம லேதேதோ பேசிநிற்பார்
பரிய உபசாரம் பண்ணியே வேறிருப்பார்.

ஈங்கிவ ரிவ்வா றிருக்குமந் நாளையிலே
தாங்காத காதல் தலைமுட்டத் தான்மயங்கி
வையத் திவளை மணந்தில மாமாகில்
உய்யவு மல்லோமென் றுணர்ந் தவதானியரும்
சமய மதுபார்த்துத் தையலுட னுரைப்பார்.

அமையும் புருஷனவ னாகாத பேயாகி
அற்றறிவு நீங்கி யலைகுவ னாமானால்
மற்றொரு வன்றன்னை மணப்பது நீதியாகும்.

மனுநீதி கோடா மறையுந் துணையிருக்கும்
இனியொன் றுரைப்பேனான் ஏந்திழையே நீகேளு.

அக்காலத் துள்ள அருமை யறிந்துமனு
தக்க விதியுரைந்தார் தாரணியில் அந்நெறியுள்
பிற்காலந் தன்னிற் பொருந்தாப் பகுதிகட்கு
மிக்க வுரையாலும் வேறு விதியாலும்
திருத்திச் சனங்களுற்ற சீர்மைக்குத் தக்கபடி
பொருத்திச் சிடுக்கறுத்தார் பின்புதித்த மாரிஷிகள்.

(நம்) பக்கமாய் நூலே பகராமற் போனாலும்
இக்காலத் துள்ளோர்க் கிசையவிதி யாக்கவேண்டும்.

ஈங்கிதுவு மல்லாமல் இன்னமொரு சன்னமுண்டு
பூங்கொடிநீ கேட்பையெனப் போற்றி யுரைக்கலுற்றார்.

ஈசன் படைத்த விருசாதி மக்களுக்குள்
நேசமு நெஞ்சு நிலைக்குங் குணங்களுந்தாம்
இருவருக்கு மொன்றா யிருப்பது வையகத்தில்
அருமை யதனாலே அவ்வா றமைந்தவர்கள்
கூடுவரே யாகில் வீடுவ தில்லென்றறிநீ
பாடுள தேயானாலும் பாவம் புரிந்தாலும்,
ஒன்றி யவரிருப்பார் ஊறுவரிற் றாமுடிவார்
நின்ற நமக்கும் நிலையிது நீயறிவாய்
இவ்வுரையைக் கேட்டே யிதமகிதஞ் சொல்லாமல்
நவ்வி விழியாளு நாணமுடன் தானிருந்தாள்.

ஐய ருளந்தனிலே யச்சமுற்றுத் தானகன்று
மெய் வளவுசேர்ந்து விதம்விதமா எண்ணமிட்டு
துக்க முற்றாள் நெஞ்சையின்னஞ் சோதித்தறியாமல்
நெக்குருகச் செய்தேனே நீசனா னென்றிரங்கி
இனியவளைப் பார்த்தா லிச்சை யடங்காது
பனிமொழியைப் பாராமற் பாவி யுயிர்தரியேன்.
ஆங்கவளுக் கென்மீதோ வாசையது தோற்றவில்லை
பூங்கொடிபாற் போகாமற் புண்பட்டு நானிருப்பேன்
என்றுறுதி செய்தே யெழுதிமொழி போகவிட்டார்
நின்றுறுதி செய்தவரும் நேயமொழி போகவிட்டார்.

மாதர சேயுன்றன் மனையின் வழிவாரேன்
ஆதரவு செய்வேன் அகன்றிருந்து நானுனக்கும்
உற்ற துணையாக வொண்டொடி நீயென்னை நினை
குற்ற முளதாகிற் கொள்ளாதே யுள்ளமதில்
குணங்கள் சிறந்தவல்லால் குற்றமிலை யுன்னிடத்தில்
இணங்கப் பிழைவிளைக்கு மீடழிந்த வென்மனந்தான்.

தூர விருந்தினிமேல் தோன்றுங் கருத்ததனைப்
போர வெழுதிமனம் பூரித்து நாமிருப்போம்
என்றவ தானியப்போ தெழுதிவிட்ட வேடுகண்டு

கன்றி மனம்பதைத்துக் காரிகையு மெய்பதறிப்
பாரா திருப்பதுண்டோ பாவலரே யும்மையுநான்
தீராத் துயரதனைத் தீர்ப்ப துமதுகடன்
கன்னெஞ்சைக் கொஞ்சங் கரையவிட வேண்டுமிப்போ
தென்னெஞ்சை நீர்திருடி யேங்க வைக்கலாகாது
மைற்றது கண்முன் வகுப்ப லெனவெழுதி
முத்திழை போகவிட்டாள் முன்னி யொருகடிதம்,

அதுகண் டவதானி யாங்கவள் பாலடைந்து
மதிகாண் கடல்போல் மனம்பொங்கி மேலெறியும்
உவகைப் பெருமலையில் உள்ளங் குளித்தமிழக்
கவலை யெறிந்தவரும் கண்டாரே காரிகையை.

காரிகை யப்போ கனக்க வுபசரித்துக்
கோரிய தென்னவென்று குண்டுமுகங் கோட்டிநின்றாள்.

இருவர் வரலாறும் ஏந்திழையே நீயறிவாய்
இருவர் மனமொன்றாய் இருப்பதுவும் நீயறிவாய்
இருவரைச் சேர்த்ததுவு மீசன்றா னென்றறிவாய்
இருவருயிரு மிப்போ தேகமென நீயறிவாய்
இருவருந்தா மணத்தல் ஏதமிலை யென்றறிவாய்
மருவியே வாழ்வோம் வனமயிலே யென்றுரைத்தார்.

காந்தருவந் தன்னில் கனிய மணந்திடுவோம்
மாந்தரது பேச்சை மனதில்வைக்க நீதியில்லை
ஈச னறிய விணைந்தினி நாமிருப்போம்
கூசாமல் நெஞ்சறியக் கூடியிருப் போமென்றார்.

ஆசை மொழிகேட்டே யன்னமவ ளுரைப்பாள்
பூசை யுமக்குப் புரியா திருக்கறியேன்
உம்பாதம் போற்றி யுமக்குநான் தொண்டுசெய்து
நம்பு மனையாளாய் நாயகரே நானிருப்பேன்

கோண லுரைபகரேன் கும்பிட் டெழுந்திருப்பேன்
வீணியென் றெண்ணாமல் வேண்டும் பணிபுரிவேன்
நல்லுயிர் நீராக நானும்மைக் காத்தளிப்பேன்
சொல் கலையாயத் துணைவியாய் நானிருப்பேன்
உங்கள் குழந்தைகளை யோம்பியே நான்வளர்ப்பேன்
திங்களு ரோகிணிபோற் சேர்ந்து மகிழ்ந்திருப்போம்,

கண்ணாள னென்றனுக்குக் கண்மணியாங் காதலரே
கண்ணாளன் நான்பயந்த காதற் குழந்தைகாணும்
ஆதி பதத்தாணை ஐம்பூதந் தம்மாணை
நாதன் பதத்தாணை நல்லவர் தம்மாணை
உன்றன் பதத்தாணை யோர்பகவன் தன்னாணை.
நின்றே னருளுமென நேரிழையுந் தானுரைத்தாள்.

''ஞான குருநீரே நற்றந்தை தாயருநீர்
மான மதுகாக்கு மாபதியும் நீராவீர்
என்னுடைய பங்கினுக்கு மீசனார் நீராவீர்
இன்ன முரைப்பதெனை வென்றனை யாளுமென்றாள்''

''உலகம் பழித்தாலும் உற்றார் துறந்தாலும்
கலகம் விளைந்தாலும் கண்டோர் நகைத்தாலும்
உமக்கடிமை தன்னை யொருநாளு நாள்மறவேன்
உமக்குரிய சொத்தை யுகந்தருள வேண்டுமென்றாள்''.

அவ்வார்த்தை கேட்டே யவதானி மேலுரைப்பார்
செவ்வாய்ப் பசுங்கிளியே சேர்த்தவ னீசனன்றோ!

நீயெங் கிருந்தாய் நிலத்தெங்கே நானிருந்தேன்
மாய னறியாமல் வைத்த துரும்பசையா
காந்த மிரும்பிழுக்குங் கார்கடலைக் கோளிழுக்கும்
நேர்ந்த நமதுமன நின்றொன்றை யொன்றிழுக்கும்
ஆவி கலந்திருக்கும் யாக்கை பிரிந்திருக்கும்
பாவங் கனிந்திருக்கும் பற்றடி நாம்பற்றுவது;

கள்ளந் தவிர்ந்திருக்குங் காதலடி நங்காதல்
உள்ளங் கலந்த வுருக்கமடி நம்முருக்கம்.
உன்மகிழ்ச்சி யென்மகிழ்ச்சி யுன்றுயர மென்றுயரம்
உன்மனது மென்மனது மொன்றடியோ வின்றுமுதல்.

கூடு பிரிந்தாலும் கூட்டுப் பிரியாது
பாடுங் குயிலே பரமனிரு தாளாணை
உன்னைப் பிரிவதிலை யுன்னாணை என்றுரைத்தல்
அன்ன நடையாளை யழகு கரம்பிடித்தார்.

காந்தருவந் தன்னில் கலியாணந் தாம்புரிந்து
காந்தனுடன் கூடியந்தக் கல்யாணி தான்களித்தாள்.
அவதானி யப்போ தகமகிழ்ச்சி கொண்டிருந்தார்.

புவியிலே தம்போலப் பூத்தவர்க ளில்லையென்றும்
சதிபதிகள் தம்போலத் தாம்சமைந்த தில்லையென்றும்
இதுபுதுமை யென்றவ் விருவர் சுகித்திருந்தார்.

இருங்கலைக ளாய்வார்கள் ஈசனடி பூசைசெய்வார்
மருமலர்ப் பூங்காவில் வளைந்துலவித் தாம்வருவார்
சரசவுரை யாடியவர் சாதுரியங் காட்டிநிற்பார்.

வரிசை யிசைபாடி மனமகிழ்ந்து வீற்றிருப்பார்
கதைகள் பலசொல்லிக் கனிவாகத் தாமிருப்பார்
இதயங் குளிர விருவரு நாட்கழித்தார்.
கண்ணாள னந்தநல்ல காதற் துணைக்குமொரு
கண்ணாய் வளர்ந்து கலைகள் பயின்றுவந்தான்.

இத்திறங் கூடி யிருக்குமந்த நாளையிலே
பித்த வெடியால் பிளந்தகுதி காலதனில்
முள்ளொன்று தைத்து முனையொடிந்து சீழ்ப்பிடித்தே

அவதானி யப்போ தாதியூர் போயடைந்தார்
கவலை மனத்தோடு காரிகையும் பின்தொடர்ந்தாள்
ஆங்கவளைக் கண்ட அழிநாக் கிழிசனங்கள்
பாங்கறியா நீசர் பழிசொல்லும் பட்டிமக்கள்
ஐயர்க் கவதியிந்த அம்மையால் வந்ததென்று
பையச் சரடுவிட்டுப் பக்கம் பழித்திருந்தார்
காந்தாரி பக்கல் கலகம் விளைத்துவிட்டார்
ஆங்காரக் கொள்ளிதனை யாங்கெழுப்பித் தூபமிட்டார்.

ஆகா வழியு மவள்மகள் மூத்தவளும்
சாகசஞ் சற்பனைகள் தாமிழைக்குந் தீம்பர்களும்
கலகமே கல்யாண மாய்த்திரியுங் காதகரும்
பலவருமாய்க் கூடிப் பகடிபண்ணிக் கேலிசெய்தார்.

தேவதத்தை யொன்றுந் தெரியாமல்தான் திகைத்தாள்
தேவதத்தை நெஞ்சில் திகில்விழுந்து நொந்தலைந்தாள்.

காலக் கேடென்றே கதைகதைத்து நெஞ்சழன்று
கோலக் கண்ணூற்றாகக் கொட்டிப் பதைத்தழுவாள்.

ஆங்கவள் தன்னை யவதானி கிட்டழைத்துப்
பூங்கொடியே யென்னைவிட்டுப் போகநீ வேண்டுமிப்போ
இக்கால மிங்கே யிருப்பதி லுன்மானம்
தக்காது துட்டர் சலியார் அலர்தூற்ற
முன்னம் நீபோனால் முடிகிப்பின் நான்வருவேன்
இன்னஞ் சிலனாளி லென்பிணி தீர்ந்தகலத்
துட்டர்கள் நாவின் துடுக்கடக்கி நான்வருவேன்
கட்டங்கள் நீங்கிக் கவலையற்று நான்வருவேன்
போய்வருவா யென்றவரும் புத்திசொலித் தான்விடுத்தார்
நாயகியு மப்போது நற்சீவன் போய்நடந்தாள்.

நல்லவள் போனபின்பு நாயகன் பட்டதுன்பம்
சொல்லி முடியாது சூழுமனந் தாளாது

அல்ல லெழுதுதற்கும் ஆனமொழி வாய்க்காது
கல்லா மனதுங் கரைந்து துடித்திடுமே.

காலிலுதித்த ரணங் காணாப் புரையோடி
மேலே புடைத்தெழுந்து வேதனைதான் விளைக்க
அடிவயிற்றுட் கட்டியொன்று மாழ்ந்துள்ளே தான்
படர்ந்து
கடுமை யுடனே கனத்துப் பருத்தெழும்பி
மாங்காயாய்த் தேங்காயாய் மாபடுவன் தான்வளர்ந்து
தாங்க வசமின்றித் தவித்தா ரவதானி.

படுத்த படுக்கையிலே பாவலருந் தாம்பதைத்தார்
அடுத்த வுறவினர்கள் அங்கைகொட்டித் தாம்நகைத்தார்.

ஆங்காலந் தன்னில் அடுத்தன்பு காட்டினபேர்
சாங்காலங் கண்டு தயவாய்ப் புறங்கழிந்தார்
காசுள்ள போது கனியவுற வாடினபேர்
மோச மறிந்து முகமறைந்து போயொழிந்தார்
பதது பததாகப் பற்கெஞ்சிக் கொண்டவர்கள்
தத்தது கண்டு சதிராகத் தாம்மறைந்தார்.
செத்தக்கால் அய்யரவர் தேட்டமதைத் தாமடைய
ஒற்றர் தமைவிடுத்தே யற்றமது பார்த்திருந்தார்.

கொள்ளிவாய்ப் பெண்டுங் கொழுந னெதிரணுகித்
துள்ளி விழுந்தாயே தொட்டுப் புண்கொண்டாயே
என்வதை வீணோ விடித்தது பாருடனே
பெண்வதை வீண்போமோ பின்னே தொடராதோ?
என்றவ ளேசியுட னெட்டவே போய்மறைந்தாள்
கன்றுங் கணவன்றனைக் காறி யுமிழ்ந்திருந்தாள்
நமையுங் கணவனிடம் நாடி யவள்வாராள்
சுமையு மவனைக் குறித்தொன்று தான்புரியாள்
ஐயோ வெனவிரக்க மங்கனை தானறியாள்
நையும் புருஷனுக்கு நாவரள நீருதவாள்.

தாயான காந்தாரி தானு மனங்கசந்து
தீயருரை கேட்டுச் சித்தங் கலங்கிவெந்து
வந்தாரோ டெல்லாம் மகன்கெட்டா னென்றுரைப்பாள்
வந்தாரோ டெல்லாம் மகன்பிழையா னென்றழுவாள்.

ஊரிரண் டானாலும் கூத்தாடிக் குண்டுநலம்
பேரது கெட்டால் பெருமையிலார் தாம்மகிழ்வார்.

கைக்கூலி வாங்கிக் கணிகைக் கழுதுபடும்
மிக்கவ ரெல்லாம் விரும்பி மனங்களித்துப்
புவனத்தில் நல்ல புனிதரெனப் பேரெடுத்த
அவதானி கூட அகப்பட்டார் நம்வலையில்
இனியென்ன வெட்கம் இலைமறைவு காய்மறைவு
பனிபோலப் போச்சே பயமென்று கைநொடிப்பார்.

அரைக்காசு செல்லா வழுகப் பயல்களெல்லாம்
சிரித்துப் புறம்பழித்துச் சீக்கொட்டித் தூறுரைப்பார்.

சீலர்தாமென் றிருக்குஞ் சீமான்க ளீங்கிவர்தாம்
பாலரோ வென்று பகடிகள் பண்ணிநிற்பார்
ஓராம லிவ்வா றுரைப்பவர் தாமொழிய
நேரா யவர்தந் நிலையறி மாந்தரில்லை
தோஷங்கள் சொன்னாலுந் துன்பத் துதவுபவர்
வேஷங்கள் அல்லாமல் மெய்யா யொருவரில்லை.

வரயோக சித்தியென்பார் வண்மையுட னவர்க்கும்
அருமை மதியுரைத்தே யாறுதல் சொல்லிவந்தார்.

சுமதிப் பெயருடைய தோழ ரகலாமல்
சமயத் துதவிசெய்து தற்காத்துத் தாமிருந்தார்.

ஊரெங்குங் கூடி யொருவாய்ப் படப்பிழையான்
பாருங்க ளென்று பலவாகப் பேசிவரத்

தள்ளாத வன்னை தவித்தழுது மெய்குலைந்தாள்
உள்ள பேரெல்லா மொதுங்கியே பார்த்திருந்தார்.

மாமியார் மூத்த மகளுமவ ளன்பனோடு
ஆமிவன் செத்தால் அகன்றிருக்க லாகாது
பங்காளி யுண்டு பலத்த சம்பந்தியுண்டு
மங்குங் கிழவி மகளுக்குத் தாயாதி
காலத்தை நோக்கியேநாம் கட்டி யிருப்போமென்று
சிலைப்பேன் போலவவர் தின்றழித்து நின்றார்கள்
காந்தாரி தன்னையவர் கண்ணெரிய வைத்தார்கள்
தாந்தாங்கள் கூடிவெகு கற்பனைகள் செய்தார்கள்.

அள்ளும் பிணியா லவதானி தான்பதைக்க
கொள்ளிவாய் நீலியுந்தன் கூட்டத் துடன்கூடி
போளிக ளாமவடை பொன்வறுவல் பச்சடிகள்
பாளிதந் தேங்குழலும் பண்ணிப் புசித்திருப்பாள்
ஐயோவென் றய்யர் அலறுங் குரல்கேட்டுப்
பொய்யோநீ போவதென்று பூவை புடுபுடுப்பாள்.

தாயாதித் தம்பியான தான்றோன்றி தானறிந்து
நேயமாய் வந்து நிலைகண் டழுதிரங்கிக்
கைவாசி யென்னுங் கனத்த வயித்தியரை
மெய்வாசி செய்ய விதித்தவர் தாம்நடந்தார்.

ஆங்கவ் வயித்தியரை யவதானி கிட்டழைத்துத்
தாங்கமுடியாமற் றவிக்கிற வென்னுயிரைப்
போக்கி யருளும்வகை புண்ணியரே செய்யுமென்றார்.

நோக்கி யிரங்கியந்த நுண்மை மதியுடையார்
ஒற்றடங்கள் தாம்போட்டே யுற்ற மருந்தளித்துக்
கற்றதொரு வித்தையெல்லாம் காட்டியேபார்த்துவந்தார்.

பத்தியம் போடுதற்கும் பக்கத் துணையேது!
இக்கற்று நிற்கையிலே சின்ன மதியுடையான்

கீழறுப்பா னென்னுங் கிளரும் பெயருடையான்
ஆழமதியா லளந்து நினைக்க லுற்றான்
இவனுக்குப் பாடுபட்டால் இருவழியில் நன்மையுண்டு
புவனத்தில் பேரடைவோம் போங்கால முற்றானேல்,
பிழைப்பானே யாமாகில் பின்பயன் பெற்றிடலாம்
இழப்பொன்று மில்லையென வேற்றுப் பணிபுரிந்தான்
செய்யாத வேலையெல்லாஞ் செய்தவன் காத்திருந்தான
மெய்யான நற்றூக்கம் விட்டவன் காத்துவந்தான்.

கொடும்படுவ னுள்ளே கொப்பளித்துத் தான்பழுக்கக்
கடுங்குத்தல் கண்டு கலங்கினா ராரியரும்
இசுசன்னி கண்டவரும் இம்சைகள் தான்படுவார்
விசைசன்னி தானலைக்க மேலெழும்பித் தான்விழுவார்.

துள்ளிசுவு கொண்டே துணுக்குற்றுத் தான்பதைப்பார்
தள்ளி யுயிர்போகுஞ் சமயமெப்போ தென்றழுவார்
தாயே தயாபரனே தற்பரனே மெய்ப்பொருளே!
நீயிரங்கிக் கொண்டிடுவாய் நின்சரண மென்றழுவார்.

தேவ தத்தைக்காகத் தெளிவழிந்து தேம்பிநிற்பார்
பாவ மவள்மானம் பறித்தேனே பாவியென்பார்.

நெட்டுயிர்ப் போடே நினைத்தவர் தானழுவார்
விட்டுப் பிராணன் ஒழிவாளே மெல்லியென்பார்
ஆவி பதைக்க வழுதவர் தாமிருந்தார்
பூவை நினைவால் புழுங்கி யவரிருந்தார்.

கட்டியைக் குத்திவிட்டார் கைவாசி யப்போது
மட்டிலாச் சீழும் வடிந்தது தாரைகொண்டு
வேளைக் கரைநாழி வெள்ளைச்சீழ் துள்ளிவர
நாளுக்கு நாட்குறைய நல்லநமன் சீட்டழித்துத்
தேறி யெழுந்திருந்தார் தீர ரவதானி
தூறின பேர்கள் துணுக்குற்றுத் தாம்வருந்த

பழிசொன்ன பேர்கள்முகம் பாராமற் போயொளித்தார்.
இழிவாஞ் சனங்களெல்லாம் இச்சகம் பாடிநின்றார்
கொள்ளிவாய்ப் பெண்டவளுங் கூசாமல் முன்புவந்து
துள்ளிவிழுந்த சுகம் போதுமோ சொல்லுமென்றாள்
சடகோபம் வைத்தாளே தையலினி யாங்கவளை
விடவெண்ணந் தானுமுண்டோ வேதியரே சொல்லு
மென்றாள்.

காந்தாரி யப்போ கதுமெனத் தானணுகி
தான்றோன்றி யாதியாகச் சகலருந் தாமறிவார்
பிள்ளை பிறந்துவசை பூண்டாயே பேய்மகனே
உள்ள மதியுனக்கு மோமுடிந்து போச்சுதையோ!
தாய்க்கு மொளித்தேயிந்தச் சங்கடம் பட்டாயே
வாய்க்குள் மடுத்தவெமன் மற்றிரங்கி விட்டானே!
அன்னை யிவ்வார்த்தைசொல்ல யவதானி யாங்கறைவார்
என்னை வசைகூறி ஈனர்கள் வாயழிந்தார்
சிற்றின்ப நோய்தான் சிறிதெனக்கும் வாராது.

மற்றவள் சீலமதை மானிலத்தோர் ஆரறிவார்
உற்ற துணையுமவள் உள்ளத் துயிருமவள்
பற்றும் பிடியுமவள் பாரிலே யென்றனுக்கும்.

ஆரென்ன சொன்னாலு மவளைத் துறப்பதில்லை
ஊரென்ன சொன்னாலும் உத்தமி யுற்றதுணை.

உறவின ரன்பதனை யுள்ளபடி கண்டேனே
பறிபோகும் வேளையிலே பார்த்தே னவர்கள்குணம்
கேட்டி லுறுதி கிளைஞர்க் குறுகுணத்தை
நீட்டி யளக்கு நெடிய கோலென்பரது
நேராகக் கண்டேன் நிலத்தென்னைப் பெற்றவளே
ஆரேயென் பக்கலம்மா ஆதரவாய் நின்றவர்கள்?

வரயோகி யென்குருவும் மற்றொரு மித்திரரும்
விரதம் புரிபவளும் மேலாந் துணையெனக்கு.

மற்றவ ரெல்லோர்க்குஞ் செத்தவ னானானேன்
செத்தவன் பக்கலினி மற்றவர்க் கென்னபயன்
நான்தெரிந்து கொண்டவளைத் தான்கருத நீதியுண்டோ?
ஆனவொரு தாய்நீயும் ஆற்றாமற் றூற்றிவிட்டாய்
தாயறியும் பேச்சல்ல தாரணியி லிம்மருமம்
நீயறியும் பேச்சல்ல நீதியல்ல நீவினவல்
தாரத்தால் நானடைந்த சங்கடங்கள் நீயறிவாய்
பாரில் துரும்பாய்ப் படுத்தின பாடறிவாய்
என்மனம் பூந்த விடந்தனிலிச்சை வைத்தால்
உன்மனம் நோகாமல் ஒற்றுமை யாகவேண்டும்.

இவ்வார்த்தை கேட்க வெரிந்தந்தக் காந்தாரி
ஒவ்வாத பேச்சுரைத்தாய் ஓகெடுவாய் நீபடுவாய்
பெற்று வளர்த்துனக்குப் பெரும்பாடு பட்டவெல்லாம்
சற்றும் நினையாயோ சண்டாளப் பேய்மகனே
பிறந்த நாள்தொட்டுப் பிசகாம லென்னுரையை
மறந்தவ னல்லவிப்போ வாழ்வென்ன வந்ததடா;
சேர்ந்த வொருத்தியிட்ட திட்டத்தில் நிற்பையோடா
ஏர்ந்த புதுமையிது வென்றுசொல்லித் தான்சிரித்தாள்.

புத்திர னப்போது பெற்றவள் புல்லுரைக்கோர்
உத்திரஞ் சொல்லாம லூமைபோல் தானிருந்தார்.

அரிய பிணியா லவதானி நெஞ்சழிந்து
தெரியு நிலைகெட்டுத் தியங்குகிற நாளையிலே
சென்னை யணுகியந்த தேவதத்தை பட்டதனைப்
பன்னி யொருவாறு பாங்காகப் பேசிடுவோம்.

தூக்கம் பிடியாளாம் சோறுகந்து தின்னாளாம்
ஏக்கம் பிடித்தே யினியவைகள் வேண்டாளாம்

நாளுக்கு மூன்றுதர நாடி யெழுதிடுவாள்
நாளுக்கு மூன்றுதர நல்லபதில் பார்த்திருப்பாள்
நாயகற் குற்ற நலிக்கு நடுங்கிடுவாள்
நாயக னுக்கு நலமது கோரிநிற்பாள்
விரக நோய்பூண்டு மெலிவுற்றுத் தான்துடிப்பாள்
சருகென வாடித் தளர்ந்து மெலிந்திடுவாள்
அறிந்தவர் வந்தால் அவர்களுடன் பேசாளாம்
மறிந்தவர் பேச்சும் மடற்காதி லேறாதாம்.

பார்த்தவ ரெல்லாம் பழிப்ப தறியாளாம்
வேர்த்தழுது விம்மி விதியை வெறுப்பாளாம்
தெய்வத்தை வேண்டித் தினமுந் தொழுவாளாம்
தெய்வத்தை நொந்தவளுஞ் சீவன்விடப் பார்ப்பாளாம்
உலைவாய் மெழுகாய் உருகிப் படுவாளாம்
தலைதனை மோதித் தடுமாறி நிற்பாளாம்
நல்லுயிர் போயே நலங்கெட்டுத் தானிருந்தாள்
அல்லலில் மூழ்கி யருவையுயிர் துவண்டாள்.

தத்துக் கவதானி தப்பினது தானறிந்து
மெத்த மனங்களித்து மெய்க்கடவுள் தாள்பணிந்து
உற்ற கொழுநன் உவந்தவை தானனுப்பிக்
கற்ற கலையாலே கற்பனைகள் கண்டெழுதிப்
பொழுதுகள் போகப் புதுமைக் கதையெழுதி
பழுதில் கவிகள் பலபன்னித் தானெழுதிப்
பனிபோல வந்த பயங்களகன்ற வென்றும்
இனிவருவ னென்னாத னேங்குமுயிர் தாங்கவென்றும்
உள்ளுக்குள் பொங்கி யுவந்து களித்திருந்தாள்
மெள்ளத் தொலைத்துவந்தாள் மேல்வளர்ந்த
நாள்களெல்லாம்.

அந்தப் படிக்கே யவதானி தான்பெயர்ந்து
சிந்தைப் பிணிதீரச் சென்னைப் பதிசேர்ந்தார்

சென்னைப் பதிசேர்ந்தம் மின்னைப்போய்க்
காணலுற்றார்
மின்னைப்போய்க் காணலுமே தன்னைத்தான்
மெய்மறந்தார்.

அன்னமு மெய்மறந்தாள் ஆங்கவ ருற்றநிலை
என்னென் றுரைப்பதது வேழமைப் பாலதன்றோ?
சோகக் கடலுடனே சோகக் கடல்கதிய
மோகக் கடலுடனே மோகக் கடல்படியக்
காதற் கடலுடனே காதற் கடலுதைய
ஓதை யொடுங்கியலை யோய்ந்த வுளத்தவராய்
இருவரு மப்போ தெதிரோடிக் கண்டவர்கள்
இருவருங் கையா லிறுகத் தழுவி நின்றார்
மருவி யவர்கள் மதிமயங்கி நின்றார்கள்.

ஒருவர்க் கொருவர் உதைவாக நின்றார்கள்
பேச்சற்று நின்றார் பெருங்கால மாங்கவரும்
மூச்சற்று நின்றார் முடிந்தவர் போலவரும்.

நெடுநேரஞ் சென்று நெடுமூச்சுத் தாமெறிந்து
நெடுநேரஞ் சென்று நிலைத்துப்பின் வாய்திறந்தார்.

ஒட்டின நாவை யுமிழ்நீரா லூறவைத்துக்
கட்டின கைநெகிழக் கால்கள் நடுக்கமுற
மெல்ல விழிமலர வேர்வை பொடித்துவிழ
வல்லியு மானவனும் வாய்ந்த அமளியுற்றார்.

என்சாமி யென்றே யிரங்கியவள் விழுந்தாள்
என்கண்ணே யென்றே யெடுத்தவர் தானயன்றார்.

தான்பட்ட தெல்லாம் தையலுக்குத் தானுரைத்தார்
தான்பட்ட பாடனைத்துந் தையல் புகன்றழுதாள்.

நெஞ்சுருகி நின்று நெடிதுயிர்த்துத் தாந்தளர்ந்தார்.
அஞ்சறிவு மோய்ந்தே யசையாமல் தாமிருந்தார்.
உணர்ந்தவர் பின்னு முயிர்த்து மிகத்துவண்டார்.

தணந்தவர் தேகந் தரியாது போலிருந்தார்,
தயிரியங் கொண்டு தடுமாற்றஞ் சற்றொழிந்தார்
உயிருடையர் போல வொருவாறு தாந்தெளிந்து
தங்கள்தம் பாட்டைச் சலியா துரைத்திருந்தார்
துங்கமா மீசனிழை சோதனை யீதாகுமென்றார்

இனிப்பிரிய லாற்றோம் இறைவ னறியவென்பார்
தனித்திருக்க மாட்டோம் தரியாது ஜீவனென்பார்
இத்துணை யாக விருவரும் பேசிநின்றார்
தத்தை நினைத்தவர்கள் தாமழுது வெம்பிநின்றார்.

முன்போ லவர்கள் முகமலர்ச்சி கொண்டிருந்தார்
முன்போ லவர்கள் முதுநூல் படித்திருப்பார்
சரசங்க ளாடித் தனிமகிழ்ச்சி கொண்டிருப்பார்
பரவசங் கொண்டு பரிந்தவர் பார்த்திருப்பார்
குடதிசை நூல்கள் கூடிப் படித்திருப்பார்
தொடரு நயமறிந்து சொல்வரிசை கண்டுகப்பார்
வடநூல்க ளாய்ந்து மனங்கனிந்து தாமிருப்பார்
திடமாக வீசன் செயலில் வியப்புறுவார்
காரணன் பாதங் கருத்தாகத் தாம்பணிவார்
பூரணன் றன்னைப் புகழ்ந்து துதித்திருப்பார்.

இப்படி யாக விருந்தவர் நாட்கழித்தார்
ஒப்பிலா வின்ப மொருமிக்கத் தாமயின்றார்.
வம்பர்கள் தூறு வரவுசெலவில் வையார்.

தும்பி யறிந்துவக்குந் தூமலரின் றேனருமை
ஞானியறிந் துவக்கும் நன்னூற் பொருளருமை
ஆனை யறிந்துவக்கும் ஆன கரும்பருமை

சூர னறிந்துவக்குஞ் கொல்லும் படையருமை
வீர னறிந்துவக்கும் வீரன் செயலருமை
கவிக ளறிவார்கள் காவியத்தின் நல்லருமை
புவியி லிருப்பவர்கள் பொன்னுலகின் மாண்பறியார்
பன்றி யறியாது தேமாம் பழத்தருமை
நன்றி யறியாதார் நன்மை புரியறியார்
கழுதை யறியாது கான ரசத்தருமை
பழுதை யறியாது பாம்பின் கதியருமை
காக மறியா கருங்குயிற் சொல்லருமை
தாக மறியாது தண்ணீரில் நண்ணுரிசை.

நரிக்குப் புனைசுருட்டு நாய்க்கு முசுற்றுகுணம்
தரைக்குட் குதிர்ட்டிகட்குந் தாங்காத கண்சூடு
மிண்டர் குணந்திருந்தி மேதினியில் மாறாது
குண்டுணி மக்கள்குணம் மண்டையொடு மாறாது.

கல்லெல்லா நல்வயிரக் கல்லாமோ கல்லாதார்
சொல்லெல்லா மெய்பயக்குஞ் சொல்லாமோ
துட்டருக்கும்

ஊரைப் பழியாக்கால் உள்வாய் தினவெடுக்கும்
பேரைப் பழியாக்கால் பின்னுந் தினவெடுக்கும்
கண்டொன்று சொல்லாக்கால் காந்தி மனங்கமறும்
மிண்டுகள் பேசாக்கால் விம்மிக் குழைந்திடுவார்.

ஆங்கவர் தூறுவதற் கஞ்சினவர் தஞ்சுகமும்
நீங்க மனம்மறுகி நிற்பார் நெடும்பாரில்.

தம்மனது தாமறியத் தற்பரன் மேலறிய
மெய்மை துணையாக வேண்டி வினைபுரிவார்
நன்மைச் சுகநுகர்ந்து நாத னருளடைந்து
துன்மை வழிதுறந்து தூயராய் வீற்றிருப்பார்.

இத்திற மிந்த விருவருந் தாமிருந்தார்
குத்திர புத்திக் கொடியர் பழித்திருந்தார்.

விற்பன்னை யானவந்த மேலான பெண்மணியைக்
கற்புடைப் பெண்டாக் கருதாத பாவிமக்கள்
அவதானி வைப்பாட்டி யாயவளைத் தாம்நினைந்து
கவர மனந்துணிந்து கற்றவுபாய மெண்ணிக்
காசெறிய வேசிவருங் கையணையும் பாரியாகத்
தேச வியற்கையெனத் திண்ணமா யெண்ணியவர்
ஆசையது காட்டி யாங்கவளைத் தாமிழுக்கத்
தனமதங் கொண்டவர்கள் தாமு முளங்கொதித்து
மனதிற் பெருமைகொண்டு வருந்தி யெழுதலுற்றார்.

இருந்திருந்து மாதேயோர் ஏழையைத் தேடினையே
வருந்திய வென்னை வயிறெரியக் கண்டனையே
பலகாலும் வந்து பயனென்ன யானடைந்தேன்
இலவினைக் காத்த கிளியென்ன லானேனே
சந்தன வாழ்மரத்தைச் சர்ப்பம் வளைந்ததுபோல்
உன்றனை நற்றி யொருவ னிருக்கலாமோ
என்றொவ் வொருவர் எழுதிவிட்டுக் காத்திருந்தார்
மன்றல குழலி மனதை யறியாமல்
சிங்கத்தின் பேடதனைச் செந்நாய் நயந்ததுபோல்,
அங்கக் கடிதங்களை யாரியர் முன்புவைத்துப்
பூமியி லும்மைப் புருஷனாய்த் தெய்வமதாய்க்
காமிப்ப தல்லால் கடைப்பட்ட நாய்களைநான்
கண்ணா லும்பாரேன் கணவரே யென்றுரைத்தாள்.

எண்ணி யுரைப்பாராம் ஏங்கி யவதானி
பெண்ணரசேநானோர் பொருளில்லாப் பேதையடி
உங்காரஞ் செய்தே நானூரை மருட்டறியேன்
பங்களாக் கட்டிப் பதமா யமர்த்தறியேன்
இந்தா தனமென்றே யேற்றபடி தூற்றறியேன்
நந்தா விளக்கே நயந்தேது செய்வேனான்?
ஊராளி யல்லனடி யுற்றதன மேடியல்ல
பாராள் வோனல்ல பருத்தவதி காரியல்ல

என்னை யடைந்தாயே வீணாயப் பட்டாயே
மின்னே பசுங்கிளியே மேன்மக்கள் பாலிருந்தார்
மான மழியாது வையகத்தோ ரேசார்கள்
தீன மடையாது தேனே சிறந்திருப்பாய்!
தெரிந்தவ் வுரைகேட்டுத் தேவதத்தை யுண்ணடுங்கி
எரிந்த மனதுடனே யேங்கித் துடித்தவளும்
பர்த்தாநீர் நானுமக்குப் பாரியை யென்றுசொல்லிக்
கர்த்தா வறியக் கலந்ததுவும் பொய்யாமோ!
நெஞ்ச மறிய நிறைகடவுள் தாமறிய
அஞ்சு மறிய வறிந்ததுவும் பொய்யாமோ!
நான்படையாச் செல்வமிந்த நாய்கள் படைத்திடுமோ
மான மறியாத மக்களுக்கு வெட்கமுண்டோ
நீதி யறியாத நெஞ்சத்தா ரஞ்சுவரோ
பேத மறியாத பித்தர்க்குப் பத்தமுண்டோ
கொள்ளக் கிடையாவுங் குணத்தினி லீடுபட்டேன்
உள்ளக் கலையறிந்த உத்தமரே யென்றுரைத்தாள்.

நாதன் பதத்தாணை நல்லவர் தம்மாணை
பூதங்கள் மேலாணை பொய்யே னொருநாளும்
ஏவல் புரிந்திருப்பேன் ஏற்றபடி நான்நடப்பேன்
பாவ வழியகற்றிப் பண்புட நானிருப்பேன்
சித்த மறிந்து சிணுங்காமல் நானடப்பேன்
மற்றொன்று கோரி மறுகாமல் நானிருப்பேன்
உம்மோ டுறும்வாழ்வே யுற்ற சுகமென்றிருப்பேன்
இம்மை மறுமை யிருமைக்கு மும்பாதம்
தன்னை மறவேன் தரியேனு யிர்பிரிந்தால்
உன்னாணை யென்றே யுறுபதந் தான்பணிந்தாள்.

பணிந்த அவளைப் பரிவாகத் தானெடுத்தே
அணங்கே யென்மீதுமனம் ஆயாசங் கொள்ளாதே
வேடிக்கை யாக விரும்பா மொழிபகர்ந்தேன்
நாடிக்கை தொட்டிருக்க நானோ விடுவதுனை

உன்னானை பெண்ணே யுளநொந்து வாடாதே
என்னவே நங்கை யினிது களித்திருந்தாள்.

கண்ணாள னந்தக் கனங்குழையே தாயாக
வெண்ணி யிருந்தான் இனிதினவள் வளர்க்க.
சீராள னென்னுஞ் சிறுவனுந் தான்வளர்ந்தான்
தோராத வொண்குணத்தாள் தொட்டு வளர்த்துவந்தாள்
கொள்ளிவாய் நீலி கொழுநன் சுகம்பார்த்துத்
துள்ளி மனங்கொதித்துத் துர்ப்பாஷை தான்படித்தே
ஆகிற காலமெல்லாம் ஆருனைச் சீந்தினவர்
சாகிற காலமதில் சக்களத்தி தேடினாயே
அண்ணையுனை யொருத்தி யண்டி யடைந்தாளே
பண்ணிய பாவமுனைப் பற்றி யழிக்காதோ
கண்க ளவியாவோ கட்டையி லேறாயோ
பெண்கள் நகையாரோ பெண்பாவம் சுற்றாதோ
கொண்ட வெனைத்துறந்த கூழை யழியாயோ
கண்டுகதை கேட்குங் காதடைத்துப் போகாதோ
கருதுமுன் கண்ணைக் கழுக்கள் பிடுங்காவோ
பரியு முனதுனெஞ்சம் பாழடைந்து போகாதோ
புனையு முன்நாக்கும் புழுத்து நெளியாதோ
எனைவிட்ட கைகள் எரிந்து கழியாவோ
ஒத்து நடக்கு முன்மகன் போகானோ!
பத்து வயதுடைய பாலகனை நீலிவைய
ஆவி தரியா ரவதானி தான்பதறிப்
பாவி மகளே பாலகனை வைவையோடி
கட்டின காலமுதல் தொட்டாயே வன்சனியாத்
தொட்டாயே வன்சனிபோல் கெட்டேனே யுன்னிமித்தம்
நன்றி யறியாத நாய்மகளே பேய்ப்பிணமே
குன்றள வுண்டே கொடும்பாவி யுன்சதிகள்.

என்றவர் சொல்ல வெடுத்தாள் பெருங்கோபம்
வான மதிர மறிந்த நிலமதிரத்

தானானே யாடித் தரிக்காயல் தான்குதித்து
நீட்டிய கையால் நெடுமுகத்திற் குத்தியவள்
தாட்டிக மாகத் தலைகால் தெரியாமல்
சீக்கொட்டிக் காறிச் சிதர முகத்துமிழ்ந்து
நாக்கெட்டு மட்டும் நாநா விதம்பாடி
ஆங்கவள் போயடைந்தாள் அம்மை வளவினுக்குத்
தாங்கி யையரெல்லாம் தரைபார்த்துத் தானிருந்தார்.

கண்ணாளன் தாயுடைய காரமதைக் கண்டிருந்தான்
புண்ணாகி நெஞ்சம் புழுங்கியழு திருந்தான்,
அம்மகனைத் தேற்றி யவதானி தானிருந்தார்.

செம்மை யுளமுடைய தேவதத்தை யின்றுணையால்
நற்பொழுது தாம்போக்கி நாட்கழித் தாரங்கவரும்
கற்புடைய நங்கையவள் காத்தவரைப் போற்றிவந்தாள்.

பொய்யுறவைப் பொய்த்தமரைப் போக்கி மனைதுறந்து
மெய்யுறவாய் மெய்த்துணையாய் மெய்த்தெய்வ
மாய்நினைந்து
அவதானி தன்னை யடைந்தவள் வாழ்ந்திருந்தாள்
புவன மறியவவள் போற்றிக் களித்திருந்தாள்
பத்தா பணிவிடைகள் பார்த்தவள் செய்துவந்தாள்.

அவதானி யன்னை யவர்க ளிருப்பறிந்து
தவறாக வெண்ணித் தனையனைத் தான்வெறுத்தாள்.

தனையன் மனந்திருப்பத் தாயவன் பாலடைந்தாள்
நினையா நினைவுகொண்டு நெஞ்சங் குறுகுறுத்து.

அன்னை மனங்கலைக்க ஆகாத மாக்கள்வந்தார்
எண்ணிக் கலகமிழை வீனர்கள் தாமும்வந்தார்.

பாலுக்குங் காவல்நல்ல பூனைக்குந் தோழராக
கீலகஞ் செய்யவல்ல கேள்கள் அடுத்துவந்தார்.

கீழறுப்பான் தானடுத்தான் கிட்டியவன் அத்தைகுடி
பாழடிக்க வல்ல படுநீலி பட்டிமகள்
குடும்பங் கலக்கியென்னுங் கோலப் பெயருடையாள்
படும்பஞ்சிற் றீயெனவே பற்றும் பாதகியவள்
கொடுமைகள் சொல்லுவதில் கூசாத னெஞ்சுடையாள்.

அத்தை மருகனுமாய் அண்டி யகத்தில்வினை
முற்ற விளைத்தார்கள் மூதேவிப் பட்டிமக்கள்.

அவதானி நீயனென்றே யன்னைக்குக் கோளுரைப்பார்
அவள்மெத்த நச்சியென்றே யாங்கவர் பாலுரைப்பார்
தேவதத்தை பேரினிலே தில்லுமுல்லும் போயுரைப்பார்
பாவவுரை கேட்டுக் காந்தாரி தான்பழிப்பாள்
சீறிப் பழிப்பதனைத் தேவதத்தை பாலுரைப்பார்
தூறு பொறுக்காமல் சுந்தரியுந் தானழுவாள்.

அவதானி யீதறிந்தவ் வன்னையைத் தானழைத்துப்
புவனத்தி லென்போலப்பிள்ளையுண்டோ நீபுகல்வாய்
ஆதி முதலாக அம்மையுன் சொற்றவறேன்
பூதகி போலவொரு பெண்பார்த்துப் பூட்டிவைத்தாய்
தன்மை யறியாய் தலைமேலே யேறவிட்டாய்
நன்மை வழிகள்பல நான்சொல்லி வாய்சலித்தேன்
இம்மையி லீங்கிவளால் என்ன சுகமறிந்தேன்
அம்ம! அதனாலே யகநொந்து நானிருந்தேன்.

வேசிமனை தேடிவீணனாய்ப் போகவில்லை
காசை யழிக்கவில்லை கண்டநோய் கொள்ளவில்லை
மண்டைப் புழுவாய் வாய்த்தவள் வன்கொடுமை
விண்டு சுகம்பூண மெய்க்கடவுள் கண்பார்த்தார் !
மனதிற் கினியவளாய் வாஞ்சை யுடையவளாய்
எனதுயிர்க் கின்றுணையாய் ஏற்றகலை கற்றவளாய்
தன்சுகம் பாராம லென்சுகம் பார்ப்பவளாய்
என்னிழல் போல விருந்து மருவுவளாய்

ஒ நத்தி கிடைத்தவளை யுள்ள முவந்துபற்றிப்
பருத்தி புடவையாகக் காய்த்த படிமகிழ்ந்தேன்.

ஆன துணையுமவள் ஆருமு யிருமவள்
மான மனைவியவள் மற்றவளைச் சொல்லாதே
நாட்டில் நடவா நடக்கையென்ன நானடந்தேன்
கூட்டத்தார் செய்யாக் கொடுமையென்ன நான்
புரிந்தேன்?
குடும்பங் கலக்கியுரை கொஞ்சமுங் கேளாதே
கொடும்பாவி கீழறுப்பான் கோள்களொன்றுங்
கொள்ளாதே!
பிறந்து மூவாண்டிலெனைப் பெற்றபிதா
செத்தொழிந்தார்
சிறந்த பேரன்பாலே தேற்றியெனைக் காத்துவந்தாய்
தாயாதி வீட்டினிலே தாழ்ந்து பணிபுரிந்து
நீயான தாலே நிலத்தி லெனைவளர்த்தாய்
சிரிப்பாணிப் பட்டுத் தெருப்பிச்சை தேடாமல்
தரிப்பான வித்தை தனியறியச் செய்துவைத்தாய்!
உன்சொற் றவறாமல் உள்ளளவு நானடந்தேன்
என்சொல்லைத் தட்டியம்ம வெத்தனையோ நீநடந்தாய்
பெற்று வளர்த்தவுன்றன் பேச்சின் படிநடந்தேன்
சித்தப் படிநடந்து செய்யுங் கடமைசெய்தேன்
சிந்தை யுவந்தபடி செலுஞ் செலவிடுநீ
இந்த வொருவரமு மென்றனுக் கீந்தருள்வாய்.

உரைத்த வுரைகேட்டே யொப்பினவள் போலிருந்து
வருத்த முளத்துவைத்து மாதாவுந் தானிருந்தாள்.

கீழறுப்பா னத்தையுடன் கிலகங்கள் செய்துவந்தான்
வாழுங் குடிக்குமவர் வங்கையா வந்துதித்தார்.

அல்லயலில் தூற்றியவர் அம்ப லெடுக்கலுற்றார்
தில்லுமுல்லுஞ் சொல்லித் தெருவூர் நகைக்கவைத்தார்

தாங்குவார் போலத் தலைதுள்ளித் தாம்நடந்தார்
ஆங்கவரை மெல்ல அவதானி தான்தொலைத்தார்.

மெய்வருந்தும் போதவர்க்கு மேலா முதவிசெய்த
கைதவன் கையில் கனக்கப் பொருளுதவிக்
கண்ணின் மறைந்து கயவரைப் போகவிட்டார்
எண்ணிப் பிழையிழைத்த வீனரைத் தான்கழித்தார்.

அன்னையுஞ் சின்னாளில் ஆதியூர் போயடைந்தாள்
பின்னை யவளும் பெரிது நினைக்கலுற்றாள்
ஊரார் வழிவிலகி யொன்றிவழி தானடக்கும்
தேரா மகனுடைய சித்தத்தை மாற்றறியேன்
வேண்டிய போதிலொரு வேசிதனைத் தேடாமல்
தீண்டிய மாதைத் தெறிக்கவிடே னென்றுசொல்லி
அவளேயென் நன்மனையாள் ஆனதுணை யென்றனுக்கும்
அவளேயென் நல்லவுயிர் ஆமுயிரை நானகலேன்
என்று பிடிவாதம் ஈனன் பிடிக்கிறானே
நின்று பிடிவாதம் நீசன் பிடிக்கிறானே
பிடிவாதக் காரனான பிள்ளையின் பேய்மதியைப்
படியும் படியுரைக்கப் பாரி லொருவரில்லை.

குணந்தரு வித்தையென்று கொண்டாடி முன்பொருகால்
பிணமறுத்துச் சாதிகெட்டுப் போகவழி தேடிநின்றான்
சூத்திர மாதவளைத் தொட்டு மனைவியென்று
சாத்திரஞ் சொல்லியவள் தன்னை மருவுகின்றான்
வைப்பாட்டி யென்றுரைத்தால் வாயழுகிப்
போகுமென்பான்
தப்பாதவள் பிரிந்தால் தன்னுயிரே போகுமென்பான்.

அவன்பிடித்த மின்னாளும் ஆனபணி செய்திருப்பாள்
அவன்சுகம் பேணுதற்கே யானவழி தேடிடுவாள்
சொம்பிற் சலந்தூக்கித் தொண்டிழைத்துப் பின்தொடர்
வாள்
இன்பம் வரத்தலைக்கே யெண்ணெயிட் டாட்டிடுவாள்

பரிசாரகன் சமைக்கப் பத்துவித மொத்தகறி
பரிவாகத் திட்டமிட்டுப் பத்தாவை யுண்ணவைப்பாள்
ஏற்ற பெண்டாட்டிபோல வேதேதோ செய்துநிற்பாள்
வேற்றுப் புருஷர்தம்மைப் பார்த்து விழிப்பதில்லை.

மாதின் மயக்கில் மயங்கிய வென்மகன்றான்
சாதிக் கடுக்காத சங்கடம் செய்கிறானே
படித்து நான்சொல்லி வையப்பாவை யவளுடனே
அடுத்துப் பரதேச மாங்கவன் போவேனென்று
சபத மிடுகிறானே சண்டாள னென்னசெய்வேன்!
விபரீதம் வாராமல் மேலல்லோ காக்கவேண்டும்.

பேற்றி மணம்புரிந்தால் பின்பொரு நன்மையுண்டு
ஏற்ற படிக்கே யிழுக்க வுபாயமுண்டு
கொண்டு கொடுத்தவர்கள் கூட்டத்தில் நாணமின்றி
மிண்டவன் செய்தக்கால் மேலோர் நகைத்திடுவார்
மேலோர் நகைக்கவென்றன் பாலன் மிகப்படிவான்
பாலன் மிகப்படிந்தே சீலமுட னடப்பான்.

இல்லாத போதும் இணங்கிவந்த நாரிதனை
எல்லாருங் கூடிவெகு வேளனங்கள் செய்திடலாம்
ஏளனங்கட் காற்றாமல் மூளியவள் போய்விடுவாள்
மூளியவள் போயினக்கால் ஆளடங்கித் தானிருப்பான்.

இந்த முறையாக வெண்ணமிட்டுக் காந்தாரி
பந்தமுடன் வரனைப் பார்த்து முகூர்த்தமிட்டு
மைந்தற் கெழுதிவரச்சொல்லிச் செய்திவிட
அவதானி யோலை யகப்பொரு ளூற்றறிந்து
குவளை விழியாளைக் கூப்பிட் டுரைக்கலுற்றார்
நம்மைப் பிரிக்கவன்னை நாடு முயற்சியிது
செம்மை யிதுநமக்குஞ் சேமந்தான் பின்னாலே
நம்மகள் நன்மணந்தான் நன்கு முடியுமெனில்
இம்மையிற் சிந்தையில்லை யேற்ற படிநடக்க,
என்றவர் ஆய்ந்தே யிருந்தனந் தாமெடுத்துச்

சென்றனர் பெண்ணின் சிறக்கும் வதுவைசெய்ய
கல்யாண வோலை கணக்காகத் தானனுப்ப
வெல்லாரும் வந்தார்கள் எக்கருடன் கொக்கரித்து.
வீரப் பிடாரிவந்தாள் வெம்புமவள் தம்பிவந்தார்.

கோரப் பிணியதுபோற் கூடுங் கிளைஞர்வந்தார்
சம்பந்தி மார்கள்வந்தார் தள்ளொணாக் கள்ளர்வந்தார்
வம்பர்கள் முண்டிவந்தார் வாய்ப்பட்டி மாக்கள்வந்தார்.

அவதானி யப்போ தறிந்தொரு சூதிழைத்தார்
இவர்களுக் குட்கலக மேற்றபடி விளைத்தால்
நம்மை யிகழ்வதற்கு நற்சமயம் வாய்க்காது
செம்மை யிதுவென்று தீர்க்கமா யெண்ணமிட்டுத்
தாயாதித் தம்மியரைத் தனியா யருகழைத்து
நீயே யெஜமானன் நின்னதிக் கல்யாணம்
இந்தா பிடியென்றே யேற்ற பணங்கொடுத்தார்.
சிந்தை மகிழ்ந்தே செருக்கா யவர்நடந்தார்.

தாரை யதுவார்த்துத் தன்மகளைத் தான்கொடுத்து
நேரு முகூர்த்த மவதானி நிறைத்துவிட்டார்.

தமக்கை மகற்குத் தரவில்லை பெண்ணையென்று
தமக்குள்ளே சிந்தையிட்டுத் தாங்க லடைந்ததம்பி
இஷ்டப் படிக்கலக வேதுவுண் டாக்கிவந்தார்
திட்டி யவனைச் செருப்பாலே தானடித்தார்.

வீரப் பிடாரிகண்டு வெம்பி மனங்கொதித்து
நேருங்குரற் பாய்ச்சி நெட்டுயிர்த்துத் தானழுதாள்.
கோவென் றழுவாள் கொடுஞ்சாபந் தான்கொடுப்பாள்.

இந்த விழவினுக்கு மேன்வந்தே னென்றழுவாள்
சொந்த மகனைத் துடுக்கனடித் தானென்பாள்.

தம்பி யுடனே தரிக்காமற் கண்செவந்து
நம்ப விவன்றனக்கு நாட்டி லுறவுமுண்டோ!
வாய்ச்சோ றிடுவார் வகையுண்டோ மற்றவனென்
பேச்சின்படி நடவான் பிள்ளையோ வென்றுரைத்தார்.

அந்த வுரைகேட் டனியாயப் பட்டவளும்
எந்தன் மகனுக் கீசன் துணையிருப்பான்
குருட்டுப் பிணங்களெல்லாங் கூடித் தலையெடுத்தார்
திருட்டுப் பயல்களெல்லாந் தேடிப் பணங்குவித்தார்
எச்சிற் கலைகளெல்லாம் எப்படியோ தாம்பிழைப்பார்
பிச்சை யெடுத்தவர்கள் பேர்பெற்றுத் தாமிருப்பார்.

என்பிள்ளைக் கென்னகுறை யாரென்ன செய்யலாகும்
பொன்னான மைந்தனுக்குப் பெண்கொடுப்பா
ரில்லையோதான்.

தாயாதி யண்ணன் சதிசெய்தான் ஆங்கவன்றன்
தாயுஞ் சதியிழைத்தாள் சண்டாள முண்டைதனக்
கென்ன கதிவருமோ வென்சாபம் வீணாமோ
பின்னைத் தெரியும் பெருஞ்சாப மென்றழுது
மார்பி லறைந்து மணப்பந்தல் முன்றிலிலே
வீரப் பிடாரியவள் வீர நடம்புரிந்தாள்.

அவதானி வாயை யசைக்காமல் போய்மறைந்தார்
அவளோடு போராட வாங்குவந்தாள் காந்தாரி.

தம்பி புரத்துத் தமக்கையுடன் கூடிச்
சம்பிரம மாகவொரு சண்டை விளைத்தார்கள்.
அம்மையு மப்போ தழுதே யொதுங்கிவிட்டாள்.

இம்மாத் திரத்தில் இதுவடங்க வின்னமுள்ளே
குட்டிக் கலகம் குமைந்து வளர்ந்துவர
எட்ட மறைந்தே யிருந்தா ரவதானி
கொடும்பாவி வம்பருடன் கூடித் திருக்கிழைத்துக்
கொடுமைகள் கோடி குழைந்து புரிந்திருந்தாள்.

சம்பந்தி வர்க்கங்களைத் தக்கமரி யாதையின்றிப்
பம்பர மாட்டிவைத்தார் தம்பி யொருபுறத்தில்
கொள்ளிவாய் நீலிமாமி கூடிப் படைபுரிந்து
தள்ளி யிரச்சலிட்டுத் தாமிருப்பா ரோர்புறத்தில்
வந்தவர்கள் போனவர்கள் வம்புரைப்பா ரோர்புறத்தில்

இந்த விதமா யிருப்பதனைத் தானறிந்து
அவதானி யப்போ தவரவர்க்குத் தக்கபடி
விவர முரைத்து மெதுவாகத் தானடந்தார்.

சாபமிட்டுத் தூளிசெய்யும் தாயாதித் தங்கையரைக்
கோபம் அடக்கும்படி கூடி யிதமுரைத்தே
அம்மை பிடிமானம் ஆற்ற முடியாது
சும்மா யிருப்பையென்று நல்லதனஞ் சொல்லிவந்தார்
துட்டரைப் பார்த்துத் துடுக்கனென் தம்பிகண்டீர்
மட்டி லிருங்களென்று வாய்ப்பூட்டுப் பூட்டிவந்தார்
தேறுங் கலையறிந்த தேவதத்தை தன்வசத்தில்
ஆரம்பணிக ளெல்லாம் அமையும் படியமர்த்தி
உக்கிராண வீட்டிலவள் உற்றிருக்க வைத்துவிட்டுப்
பக்குவமாய்த் தனக்குப் பாரமில் லாமற்செய்தே
ஆரோபோல் தானிருந்தார் அப்போ தவதானி.

சீராய் முடிந்ததுதம் செல்லமகள் கல்யாணம்
வதுவைக்கு வந்தோர் வரிசைபெற்றுத் தாமகன்றார்
புதுமைத் திறமறிந்து போனார்பெண் கொண்டவரும்
அவதானி தேவதத்தை யன்பிற்கு வேறுவமை
புவனத்தி லில்லையென்று பேசியவர் போனார்கள்.

கொள்ளிவாய் செய்யுங் கொடுமை பொறுக்காமல்
தள்ளியே சென்னைவந்து தாமடைந்தார் ஆங்கவரும்
கண்ணாளன் சீராளன் காதல் மகளுடனே
நண்ணுமொரு தோழியுடன் நன்றாக வாழ்ந்திருந்தார்
சீலமுள்ள தாயான தேவதத்தையுட் கனிந்து
பாலரை நாளும் பரிவாய் வளர்த்துவந்தாள்.

பெற்றவளைப் பாலர்களும் பின்மறந்து பேர்மறைந்து
மற்றவளைத் தாயாய் மதித்தன்பு காட்டிவந்தார்.

நேர மறிந்து நிறுத்துணவு தானூட்டி
வார மறிந்து வரிசைமுறை மாறாமல்
தலைக் கெண்ணெய்யிட்டுத் தப்பா மருந்துதவி

நிலத்தில் படுக்காமல் நேரமளி மேல்வளர்த்திக்
கண்ணை யிமைபோலக் காத்தவரைப் பார்த்துவந்தாள்
பெண்ணிற் சிறந்தாளும் பேணிப் பெரிதுவந்தாள்
தன்கொழு நன்மக்கள்தமைத் தன்மக்க ளாய்நினைத்து
நன்மனந் தான்கனிந்து நாளும் வளர்த்துவந்தாள்.

அவர்க ளுறவை யடுத்தடுத்துக் கண்டவர்கள்
இவர்க ளறிந்தசுக மேழுலகி லில்லையென்பார்
நல்லவ ரெல்லாரு நற்கண்ணாற் பார்த்துவந்தார்
புல்லர்க ளெல்லாரும் பொச்செரிச்சல் கொண்டிருந்தார்.

தனமதத் தோரெல்லாம் தளர்ந்து வருந்திநின்றார்
மனதி லம்மாதை வசம்பண்ணத் தாமுயன்றார்
கற்புடை மெல்லியெனக் காணும் பரிசுவிட்டே
யற்ப மதியோடே யாங்கவளைக் காதலித்தார்.

பெண்ணாசை கொண்ட அந்தப் பேய்மாலப் பட்டிமக்கள்
மண்ணாசை காட்டி வளங்கள் பலகாட்டி
நகை யாசை காட்டியவர் நல்ல பொருள்காட்டி
மிகையாசை காட்டி வினைய நலங்காட்டி
தம்பெருமை கூறித் தனித்தூது போகவிட்டு
வம்பர்க ளேங்கி வழிபார்த்துத் தாமிருந்தார்.

தேவதத்தை தானுந் தெரிந்தவர் தீக்குணத்தைப்
பாவதத்த ராகுமந்தப் பஞ்சைகட்குத் தான்பதிலாய்
நீங்களெல்லா மென்றனுக்கு நித்தச் சகோதிரர்கள்
நீங்களெல்லாம் பாவ நினைவொழிந்து வாழ்ந்திருப்பீர்.

கற்புடைய பேரைக் கருதாமல் வாழ்ந்திருப்பீர்
பொற்புட னன்னெறியைப் போற்றிநீர் வாழ்ந்திருப்பீர்
தீமை வழிதுறந்து சீராக வாழ்ந்திருப்பீர்
ஆமும் முடன்பிறப்பை யஞ்சியினிப் போற்றிடுவீர்
உரைபோக்கி விட்டாள் உறுதியுள்ள மாதவளும்
உரைபோக்கி விட்டாளே யுத்தமி பித்தருக்கு

கறுத்த வுளத்தார் முகமுங் கறுத்தார்கள்
வெறுத்துத் தலைகுவிந்து வெந்துருகிச் சாம்பினார்கள்.

கோவித்த காந்தாரி கொள்ளி மருகியுடன்
மேவிக் கறுக்கொண்டு வேதனை தாம்புரிந்தாள்
மகனென்று பாராமல் வார்த்தை வழங்கலுற்றாள்.
புகைகொள்ளுங் கண்ணாள் புழுங்கிப் பொரிய
லுற்றாள்.

ஆங்கவளை நோக்கி யவதானி யேதுரைப்பார்
பாங்கறி யாத்தாயே பவிஷெடுக்க வந்தாயோ!
நம்மவ ரெத்தனைபேர் நாட்டுக்குக் கேடிழைப்பார்
செம்மை நெறிபிசகித் தீங்கொரு நூறிழைப்பார்
பொய்ச் சீட்டெழுதிப் பொய்ச்சாக்ஷி சொல்லவஞ்சார்
கைக்கூலி கொள்வார் கடன்வாங்கி யில்லையென்பார்
பிறர்மனை கைப்பிடிக்கும் பேதைய ரெத்தனைபேர்
மறைந்து களவுசெய்யும் வஞ்சர்க ளெத்தனைபேர்
பரத்தயரைச் சேவைசெய்யும் பண்டித ரெத்தனை
பேர்

துரத்தியே கற்பழிக்குந் துட்டர்க ளெத்தனைபேர்
பண்டித ரெத்தனைபேர் பந்துலுமா ரெத்தனைபேர்
மிண்டராய்த் தீம்பிழைத்து மேலுக்குச் சீலஞ்
சொல்வார்.

சாஸ்திரிக ளெத்தனைபேர் சம்பன்ன ரெத்தனைபேர்
பார்த்துச் சமயம் பரதாரந் தோய்ந்திருப்பார்
ஆசாரி யெத்தனைபேர் ஐயங்கா ரெத்தனைபேர்
வேசிகள் வீட்டினிலே வேலைகள் செய்திருப்பார்.

வெளியில் வரும்போது வீண்விருது கூடவரும்
பளபள வென்று பகல்வேஷந் தாந்தரிப்பார்
சன்னாசி யெத்தனைபேர் தாசியொடு ராக்கழிப்பார்.

மின்னிய தாலியில்லா முண்டைகளை மேவிநிற்பார்
சளுக்கும் பிளுக்குமுள்ள தாட்டோட்ட ரெத்தனை
பேர்

தளுக்கிக் குலுக்கிவருந் தட்டுகள் பின்றொடர்வார்
தேவடியாள் வாயுறுஞ்சிச் சின்ன மழியாமல்
கோவிலிலே பேரங்கட்குக் கோலவ பிஷேகஞ்செய்து
திருநீறு தந்து திருத்துழாய் கைக்கொடுத்தே
அரிய சடகோப மானதலை மேற்பதித்துத்
தீர்த்த மதுவார்த்துத் தினமும் புரட்டிழைக்கும்
தூர்த்தக ளெத்தனைபேர் சொல்லக் கணக்கு
முண்டோ?

சாதியி லீங்கிவரைத் தள்ளிக் கழித்தாரோ
பேதைமதியா லென் பேரைப் பழிக்கலுற்றாய்
தெரிந்தவ ரென்னடையைத் தீதென்று தாம்பழியார்
தெரியார்க்கு நான்பயந்து செப்புஞ் சுகந்துறவேன்

''உற்ற பொருளழித்தே யூர்திரிந்து கட்குடித்துப்
''பித்தேறிப் போயே பெரும்பிணிகள் கொண்டவனைக்
''கைவிட்டு நாட்கழித்த காரிகையைப் பெண்டாக
''மெய்யாங் கலையறிந்த மெல்லியலைப் பெண்டாகத்
''தெரிந்தே யெனைவரித்த தேமொழியைப் பெண்டாகப்
''பரிந்தென் மனமிசைந்த பாவைதனைப் பெண்டாக''

''கொண்டவள் பல்லாலே கொத்துண்ட நான்றானும்
''பெண்டவள் கையாலே பெயரழிந்த நான்றானும்
''நீலி யுரையாலே நெக்குவிட்ட நான்றானும்
''சூலம் போற்சொல்லால் துளையுண்ட
நான்றானும்''

ஆக்கினே னம்மாநான் ஆன சுகந்தேடி
வாக்கினிற் பொய்யுரையேன் வம்புக் கிழுக்கிறீரே
மரியாதை யில்லாமல் வார்த்தை பலுக்கிறீரே
தெருவார் நகைக்கவழி தேடிப் பழிக்கிறீரே
பெருமை பாராட்டாமற் பேசத் தொடங்கினீரே
புருஷனா யெண்ணாமல் புன்மை யுரைக்கிறீரே
முழுதுந் தலையில் முளகரைக்கப் பார்க்கிறீர்கள்
பழுதது பாரீர் பரதேசம் போய் விடுவேன்

என்னை யிழந்திடுவீர் யீன ருரைகேட்டுச்
சன்னதங் கொண்டு சதிசெய்தா லென்றுரைத்தார்.

கொள்ளிவாய் நீலி குழுமி யெழுந்திருந்து
கள்ளப் பயலேயென்னைக் கைவிடப் பார்க்கிறையோ ?
உன்சமர்த்து மென்சமர்த்து முள்ளபடி பார்ப்போம்
உன்போ லிருப்பவரை யுற்றழைத்துக் கேட்டிடுவோம்
என்னைத் துரத்தவந்த வீங்கிவளை மொட்டையிட்டுப்
பின்னைத் துரத்தாமற் போவதில்லை பாரடாநீ.

பள்ளிச்சி வந்தாளே பார்ப்பான் கடைத்தேற
உள்ளதொரு நூலை யுருவி யறுத்தெறிநீ
சத்தியஞ் செய்தெனைநீ தள்ளிவிடா யிப்போது
தத்தி விழுந்து தலைதுள்ளிப் போகாதே

என்றவள் சொல்ல வெழுந் தவதானியப்போ
இன்று முதலா வெனக்கு நீதாயாவாய்
உன்னைத் தொடாதகுறை யொன்றொழிய வுன்றனுக்குப்
பின்னைக் குறைபுரியேன் பீடழியப் பேசாதே.

இவ்வார்த்தை கேட்டே யெரிந்தவ ளேதுரைப்பாள்
ஒவ்வாத மூளி யுடன்கட்டை யேறுவளோ
அழுகி நீசெத்தால் அவளோ அறுப்பதென்றாள்
கிழவியுட னெழுந்து கிட்டியொரு பேச்சுரைப்பாள்.

பள்ளிச்சி நாறியிவள் பார்ப்பானைத் தேடிவந்தாள்
தள்ளிக் கழியாமல் சாகும் பொழுதிருந்தால்
செருப்பா லடிப்பார்கள் சேர்ந்த வுறவினர்கள்
சிரிப்பாணிப் பட்டவளுஞ் சீர்குலைந்து போகவேண்டும்.

மருந்தில் மயங்கினையே மாபாவி யிட்டாளே
தெரிந்த குழந்தைகளும் சித்தம் மலைந்தாரே
பாலகன்கள் இங்கிருந்தால் பாதகிதான் கெடுப்பாள்
சீல வழிமாறித் திறங்கெட்டுப் போவார்கள்
குழந்தைகளை நாங்களிதோ கூட்டியே போய்விடுவோம்
இழைந் திவளோடே யிருந்தழி யென்றுரைத்தாள்.

ஊரார் சிரித்திடவும் ஒத்துண்டு நீயழிவாய்
பேரூருங் கெட்டுப் பெருமை யழிவையென்றாள்.

இங்கிவர்கள் தீயுரையை யெண்ணமிட்டுத் தான்கேட்டுப்
பொங்கு சினத்தால் புழுங்கு மனமுடையார்

அவதானி நெஞ்சினுக்கோர் ஆன துணையாவார்
புவியி லெவர்க்கும் பொருந்து முதவிசெய்வார்
அனுகூல ரென்னும் அழகு பெயருடையார்
கனிவா யவதானி காற்கட்டைத் தான்பார்த்துப்
பிள்ளைகள் பெற்றுப் பெருங்காலங்கண்டாயே
கொள்வன செய்து குடித்தனம் பண்ணினையே
ஆனாலு மிந்த அகமை யுனக்காமோ
தானாக வுன்னைத்தள்ளிவிட்டா லென்னசெய்வாய்.

பேய்மாலப் பெண்ணே பொறுத்துக்கொள் ளென்றுரைத்து

தாய்தனை நோக்கியவர் தள்ளாத நீகிழவி
பிள்ளை மனதின்படி போகாமல் வாதுசெய்தால்
கொள்ளி யிழந்திடுவாய் கூடா துனக்கிதென்றார்.

என்ன வுரைத்தும் இருவருஞ் சம்மதியார்
பின்னை யிடுக்கண் பெரிது மிழைத்துவந்தார்.

தொப்பை முதலி சுடுசொற்கள் தாங்கேட்டுத்
தப்பிலிச் சொட்டை சலங்கொள் மொழிகேட்டுக்
குளறுவாய்க் குள்ளன் குயுத்தி யதுகேட்டுக்
களரி யதுகூட்டிக் கண்டவர்க்குச் சீட்டெழுதி
முண்டைகளைச் சேர்த்து முறிமருந்து தாம்தேடி

அண்டிப் பிறர்பால் அழிமருந்து தாம்தேடி
மந்திர வாதிகளால் மாற்றும் வழிதேடி
இந்திர ஜாலங்கள் ஏதேதோ பண்ணிவந்தார்.

அவ்வழிக ளெல்லாம் அவதானி தானறிந்து
ஒவ்வா மருந்துகளால் ஊறுவரு மென்றுணர்ந்தே
அனுகூலந் தம்மோடு மாலோசனை புரிந்து
மனதாரச் செய்துவரும் மற்றவர் சற்பனையால்
தீமை விளையுமெனச் சிந்தையு ளேக்கமுற்றே
யாமவர் தம்மை யகற்ற வழிதேடி

கொள்ளி வாயோடு கொடுமைசெய் அன்னையையும்,
மெள்ளப் புறம்போக்க வேண்டும் விரகிழைத்தார்.
ஆங்கவ ரப்போ தயிர்த்து மனங்கசந்து
நாங்களேன் போவோமோ நன்மைந்தர் தம்மைவிட்டு
என்னனு நெஞ்சத் திரங்கி யவதானி

தன்னந் தனியே தான்வருந்திப் பின்துணிந்து
வந்தவர் தம்மை வரக்கொண்டு போங்களென்றார்.
வெந்த வுளத்தாரும் மேலவரைத் தாமழைத்தார்
கண்ணாளன்றானுமப்பா கட்டோடேபோகேனென்றான்
பெண்ணின் மணாளனுடன் பித்தரே போங்களென்றான்
மாற்ற மறியாத மற்றிருவர் போவதற்குப்
பேர்த்தடி வைத்தார் பெரும்பயண வாசையினால்
சீராளன் கல்யாணி சேர்ந்து வரப்போனார்
போராட்டந் தாமிழைத்துப் புண்படுத்தும் பொய்மனத்தார்.
ஆதியூர் தன்னை யடைந்தவர் தாமிருந்தார்
நீதி லவதானி செல்லுஞ் செலவனுப்ப.
அவதானி பின்னே யனுகூல ரோடுரைப்பார்
புவனத்தி லில்லாப் புதுமை யெமதுநிலை
அறிந்தோ ரறிவார் அறியா ரெனவறிவார்
திறந்தெரியா வீணர் திருக்கு மொழிபகர்வார்
தேவதத்தை யென்னோடு சேர்ந்து வந்தாளென்றுரைப்பார்
பாவமதை மாற்றவொரு பக்குவஞ் செய்யவேண்டும்
நாடறியக் கல்யாணம் நானவளைச் செய்யவேண்டும்
தேடியே சூதிழைக்குந் தீயர் அடங்கவேண்டும்
புருஷன் பெண்சாதியென்று பூமியில் சொல்லவேண்டும்
வரிசைதப்பிச்சொல்பவரை வாய்மீதடிக்கவேண்டும்
சாத்திர மொப்பாது தப்பு விவாகமென்று
பார்த்தெவர் சொன்னாலும் பாவமிலை யிக்கருமம்
விவகாரங் கண்டவர்கள் வேறா யுரையார்கள்
இவளை மணத்தலைய வேதமிலை நீதியென்றார்.
ஆபத்தோ ரைந்தில் அருவை மறுமணந்தான்
பாப விலக்காய்ப் பரியுந் தருமமுறை
பரதாரம் பார்த்தறியேன் பாவவழி போயறியேன்.
சரத மிவளுறவைத் தற்பரன் கூட்டிவைத்தான்.
ஆன மனையாக யாவரும் கண்டறிய
நானிது செய்யவேண்டும் நண்பரே யென்றுரைத்தார்.
அனுகூலர் கேட்டே யறைகுவா ரோர்வசனம்
கனமாம் விநாயகரைக் கண்டு கொணர்ந்திடுவேன்
சாத்திரங் கற்ற சதுரரைத் தானழைப்பேன்
பார்த்திது செய்யவல்ல பாசுரரை யானழைப்பேன்.

நீதி யறியாத நீசரை வாய்மடக்க
வேதமுறை யறிந்த விப்பிரரை நானழைப்பேன்.
பாரியைப் பார்த்தாவைப் பார்த்தேன் நான்பாரினிலே
ஓரினிவள் போல வுத்தமியைக் கண்டதில்லை
காசைப் பணத்தைக் கருதியிவள் வந்ததில்லை
மோசம் புரிந்து முழுத்திட வந்ததில்லை
தனிகர் கிடையாமல் தானும்மைப் பற்றவில்லை
இனிய குணம்பார்த்தே யீண்டுமைத் தானடுத்தாள்.
தரிசனந் தேடித் திரிந்த பிரபுக்களைத்தான்
வரிசை யறிந்து வழிவழியே போகவிட்டுத்
தன்னைத் தான்காத்துத் தாழும் வழிபோகாமல்
மின்னும்மைக் கண்டு வெகுநா ளூறவாடி
இருவர் மனதும் ஏகமெனத் தானறிந்து
மருவினா ளும்மை மனது கனிந்தவளும்.
நற்கலை யோதி நறுங்கவி தான்புனையும்
அற்புதங் கண்டே யகமுருகி யிச்சைவைத்தாள்
கன்னிகை யாகக் கருதினாள் தன்னையவள்,
பின்னும்மை யேற்ற புருஷனென வரித்தாள்.
உம்பா கந்தன்னை யுறுதியாய்த் தான்பிடித்தாள்
தன்பாவ மெல்லாந் தவிடாய்ப் பறக்குமென்று ;
கண்ணை யிமைபோலக் கட்டியுமைக் காத்திருப்பாள்
புண்ணியப் பேறாகப் போற்றியுமை யாதரிப்பாள்
தாது கலங்கையிலே தற்பரன் கண்பார்த்துத்
தீதிலுமை யளித்தார் திண்ணமென மகிழ்ந்தும்
அல்லும் பகலு மறுபது நாழிகையும்
நல்ல வளும்மை நயந்து பணிகள்செய்வாள்
உற்ற துணையா யுயிருக் குயிர்தருவாள்
பெற்ற தவமிவளைப் பெண்டாக நீர்படைத்தீர் !
அவளகம் நோகாமல் ஐயோவென் றேங்காமல்
குவளை விழியில் முத்துக் கோவைகள்தோன்றாமல்
காத்து நடத்தவேண்டுங் கற்பகம் போல்நீரிருந்து
பார்த்து நடத்தவேண்டும் பண்பாக நீரிருந்து.
ஆகையி னாலே யழகு மணமதனைத்
தோகைக்குச் செய்து சுகம்பெற்று வாழ்ந்திடுவீர்
என்றுரை தந்தவரும் ஈச்சுர பட்டரெனும்
நன்றாய் மறையுணர்ந்த நல்லவர் கையாலே
வேதியர் கையால் விவாகச் சடங்கிழைத்தே
ஆதி யூராரும் அரிவை கழுத்தினிலே
மங்கல மாகுநல்ல மாங்கிலியந் தான்முடித்தார்.

திங்களு ரோகணிபோல் சேர்ந்தவர் தாமிருந்தார்!
சங்கதி யெங்குந் தழைத்துப் பரவியது
அங்குறு தாயு மறிந்துள்ளே யாயலுற்றாள்
பேதை மதியாலே பிள்ளைமேல் தண்டெடுத்தோம்
ஏதினிச் செய்வோம் இணங்கி நடக்கவேண்டும்
வம்பி மருமகளும் வன்னாக்குக் கொண்டவனைப்
பம்பர மாட்ட அவன்பார்த்து மனங்கசந்தான்.
நெல்வேலிச் சேஷையங்கார் நேயமுள்ள புத்திரிக்குச்
சொல்லுமறுமணந்தான் தோஷமிலையென்று செய்தார்!
கைம்பெண் விவாகமிந்தக் காலத்தி லுண்டாச்சு
அம்புவி எங்கு மதுவே தலையெடுக்கும்
காலத் தியற்கைதனைக் கட்ட முடியாது
கோலமகனு மந்தக் கொம்பனையைத்தான் மணந்தான்
சாதிவிட்ட சாதியென்று தள்ளலினி வாய்க்காது
நீதிக் கடுத்ததென்று நின்றுமகன் வாதிழைப்பான்
அவன் சொல்லனுமதிக்க வாயிரம்பேர்முன்வருவார்
புவனத் திதுவும் புதுமையாய் விட்டதிப்போ
பெண்டாக வந்தஅந்தப் பெண்ணும் பெருமையுள்ளாள்
கொண்டவன் தன்னை விழிக்குள்வைத்தங்காதரிப்பாள்
குழந்தைகள் தம்மைக் குறைவின்றித் தான்வளர்ப்பாள்
பழந்தவறிப் பாலில் விழுந்த பழங்கதைபோல்
ஆச்சென்று சொல்லி யம்மை யகமகிழ்ந்தாள்.
பேச்சொன்றுஞ் சொல்லாமற் பேமாலக்கொள்ளியப்போ
நம்மால் நமக்கு நலக்கேடு வந்ததிப்போ
சும்மா அவனையினித் தூஷித் திலாபமில்லை
பிள்ளைகள் பெற்றோம் பெரிய குடியானோம்
உள்ளபடிக் கவனும் ஓர்குறையுஞ் செய்யவில்லை
போக மனுபவிக்கப் புத்தியவன் கொண்டாக்கால்
சாகசஞ் செய்து தடுக்க முடியாது,
கொள்ளி வாய்கூசி கொடுமை தணிந்திருந்தாள்
உள்ளுளே கோபம் ஒடுங்கி யவளிருந்தாள்.
அறிந்தவ ரெல்லாம் அகத்துள் வியப்படையச்
சிறந்தவர் வாழ்ந்திருந்தார் தேவ னருளாலே.
அவதானி வாழி அவர்குடும்பந் தான்வாழி!
புவியிலிந்நூல் படிக்கும் புண்ணியர் தாம்வாழி!
இவ்வுலகில் உள்ளவர்கள் எல்லோரும் தாம்வாழி!
நவ்வி விழித்துரைச்சி ராணியார்கோல்வாழி!
அவதானிநற்கதையை யாதரவாய்க்கேட்பவர்கள்
புவனத்திதுவோர் புதுமையாய்க்கேட்பவர்கள்

தானாய்த்தலையெடுத்துத் தாரணையிற் பேரெடுத்துப்
பேணாய்ப் பெருமாளாய்ப் பிள்ளையவர் சீரடைந்து
தாயாதிக் காய்ச்சல் தாக்காமற் றான்வளர்ந்து
வாயாடிப் பட்டிமக்கள் வம்புக்குத் நான்விலகித்
தாயால் விளைந்தபல சங்கடங்கள் தான்சகித்துத்
பேயாமனைவி செய்யும் பேயாட்டந் தான்பொறுத்துப்
பரம னருளாலே பாக்ய வசத்தாலே
தருமவழியாலோர் தார மடைந்தவர்தன்
குறறங்கள் போக்கிக் குறித்தவர் தம்மிடத்தில்
நற்றங்கள் தூக்கி நடுவாய் நினைக்கவேண்டும்.
தேவதத்தை மெய்க்கதையைச சிந்தைவைத்துக்
கேட்பவர்கள்

பாவ மதியால் படுநிந்தை சொல்லாமல்
ஆதி முதலாய் அவள்பட்ட மாவிடும்பைப்
பாதகர் கூடிப் படுத்திய பாடதனைப்
பேருக்குக் கட்டினவன் பேரழிம்பு செய்ததனை
ஆருக்கு மாகாமல் ஆஸ்தி யழிந்ததனை
பிணிக்கு மிரையாகிப் பேரழிந்து போனவனைத்
தனித்தவள் தள்ளித் தனியே யிருந்ததனைக்
குறும்பர்கள் சுற்றிக் கொடுமை புரிந்ததனை
மறுவி லவளை மசக்க முயன்றதனை
தன்னைத்தான் காத்துத் தரும வழியாகத்
துன்னிய பர்த்தாவைத் தூய வதுவைசெய்து
பதிக்குப் பணிகள்செய்து பாங்கா யிருப்பதனை
மதித்து மறுவொழித்து மாண்பது கொள்ளவேண்டும்
மானங் குலங்கல்வி வண்மை யறிவிவைக்குத்
தானமாய் நின்றவள்தன் தன்மை யறியவேண்டும்.
அம்மானை யாடும் அழகுச் சகோதரிகாள்
இம்மாண் கதையை யிதயங் களிகூர
பாடுவீர் பாடிப் பலன்கள் பெறுவீர்கள்
நாடிப் படித்து நலங்கொள் நெறியமர்ந்து
குழந்தைகள் பெற்றுக் குணமாக நீர்வளர்ப்பீர்
விழைந்து நலம்பருகி மேலாக வாழ்ந்திருப்பீர்!
கழங்குக ளாடக் கவிபாடி நான்றருவேன்.
குழந்தைகாள் நீங்கள் குணமுடன் வாழ்ந்திடுவீர்;

ஸ்ரீகருணாநிதயேநம :

—முற்றிற்று—